# முரசொலி

வார இதழ் — மு. கருணாநிதி

முரசு 3 | 7—9—56 | வெள்ளி | ஒலி 22


நாடகம்

## உதயசூரியன்

### கருணாநிதி

காட்சி: 3

[தெரு—முதல் காட்சி
யில் வந்த குடிகாரக் கறுப்
பன் சிறிது தெளிவான
நிலைமையில் தெருவில்
வந்து கொண்டிருக்கிறான்,
பாடியவாறு; அதிகத்
தடுமாற்றமின்றி.]

"வலிமையற்ற தோளினாய்
போ போ போ
மார்பிலே ஒடுங்கினாய்
போ போ போ
பொலிவிலா முகத்தினாய்
போ போ போ
பொறியிழந்த விழியினாய்
போ போ போ
ஒலியிழந்த குரலினாய்
போ போ போ
ஒளியிழந்த மேனியாய்
போ போ போ
கிலிபிடித்த நெஞ்சினாய்
போ போ போ
கீழ்மை யென்றும் வேண்டுவாய்
போ போ போ

[இப்படி அவன் பாடிக்
கொண்டு வரும்போது, எதிரே
கூனல் முதுகினரும், கதர்த்
தொப்பி, கதர் ஆடை, கண்
ணாடி அணிந்தவருமான
பலவேஷம் பிள்ளை வருகிறார்.
அவரைக் கண்டதும் கறுப்பன்
வியப்புடன்]

கறுப்: அடேடே...வா,வா,வா
பலவேஷம் பிள்ளை! இது
என்ன புது வேஷம்?...

பலவே: காலம் மாறிப் போச்
சுல்ல தம்பி!...

கறுப்: ஆமாம் "ரோஜா"லு
மாராயி!'...

பலவே: அட, நான் அதைச்
சொல்லலேப்பா...
இந்தக் காலத்திலே இந்த
வேஷத்துக்குத்தான்
மதிப்பு அதிகமா இருக்கு!
பத்து பதினைஞ்சு வருஷத்
துக்கு முந்தி இந்த மாதிரி
கதர் வேஷத்திலேயிருந்தா
மண்டை உடையும்...
எலும்பு நொறுங்கும்...
ஜெயில்ல போடுவான்......
இப்ப இந்த டிரசைப்
பார்த்து காக்கி டிரஸ்கூட
தலை வணங்குதுல்ல!......

கறுப்: உண்மைதான் பல
வேஷம்! ஆனா ஒண்ணு;
இப்ப சொன்ன பாரு—
பத்து வருஷத்துக்கு முன்
னாடி இருந்த நிலைமையை!..
அந்த நிலைமையிலே அடி
பட்டவன் உதை பட்ட
வன் எல்லாம் இப்பவும்
அடிபடுரான்; உதை படு
ரான்; ஜெயிலுக்குப்
போறான்...தியாகம் செய்
தவர்கள் நூற்றுக்குத்
தொண்ணூறு பேர் என்
னாட்டம் தெருவிலேதான்
நிக்கிறாங்க!...ரத்தக் கறை
பட்ட கதர் சட்டைகளும்
கதர்த் தொப்பிகளும் சுதந்
திர சர்க்காரில்கூட ஜெயி
லில்தான் கிடக்கின்றன.
விடுதலைப் போராட்டத்
தில் ஏற்பட்ட தியாகத்
தழும்புகளின் மீது இப்
போது மறுபடியும் அடி
விழுகிறது; மராட்டியத்
தில்—குஜராத்தில்—மாநிலத்
தில் எங்கணுமே ... இந்த
நிலை! ஆனால் உன்னைப்
போன்ற புதுக் கதர்க
ளுக்கு அப்போதும்
கொண்டாட்டம்! இப்
போதும் கொண்டாட்
டம்!! உங்க அப்பா
அம்மா புத்திசாலிய்யா!...
சும்மாவா வச்சாங்க;
உனக்குப் பேரு பலவே
ஷம்னு!

பலவே: பலவேஷம்கிறது சாமி
பேருப்பா!

கறுப்: சரிதான் போ...இந்த
பல்டியடிக்கிற அரசியல்
பண்பு, அந்தக் காலத்தி
லேயே ஆரம்பமாயிட்
டுதா? போகட்டும்; இப்ப
எங்க பயணம்?

பலவே: அடடே! உன்னைத்
தேடிக்கிட்டுத்தான் வந்
தேன். வந்த காரியத்தை
மறந்துட்டு ஏதேதோ பேசி
கிட்டு இருக்கிறோமே...ம்..
கறுப்பா! உன்னை எங்க
முதலாளி கூப்பிட்டுகிட்டு
வரச் சொன்னாரு. அதான்
வந்தேன்.

கறுப்: எந்த முதலாளி? மளி
கைக் கடை மாணிக்க சுந்
தரம் தானே!...

பலவே: அடாடாடா .........
அவரை விட்டு ரொம்ப
நாளாச்சே நான்! சொல்
லிக்காமலே அவரைவிட்டு—
அவரு கடையை விட்டு
விலகிட்டேனே நான்!

கறுப்: என்னய்யா....ரொம்ப
நம்பிக்கையா உன்னை வச்
சிருந்தாரு! எவ்வளவு
காலமா சோறுபோட்டு
வளர்த்தாரு!...

பலவே: அதெல்லாம் சரிதான்!
...எனக்கு அந்த மளிகைக்
கடை தராசைத் தூக்கித்
தூக்கி கையெல்லாம் வலி
கண்டுபோச்சு! அதுவுமில்
லாம இப்ப எனக்கு சிரம
மில்லாம பணம் கிடைக்
குது! கை வலி, கால் வலி
தலை வலி எதுவுமில்லை!
கொஞ்சம் வாய்வலி—அவ்
வளவுதான் செலவு!...

கறுப்: அதுசரி; உமக்கு வாய்
வலிச்சா எதிரிக்கு தலைவலி
ஆரம்பமாகித்தானே
தீரும்!....அது கிடக்கு...
இப்ப உன் புது முதலாளி;
யாரு?...

பலவே: அதான் நம்ப
சேர்மேன் ... ஜில்லா
போர்டு மெம்பர் ......
சமயோஜிதம்பிள்ளை!

கறுப்: சமயோஜிதம் பிள்
ளையா?...அவருக்குக்
காங்கிரசு பிடிக்
காதே! சுயேச்சை
யில்ல அவரு!

பலவே: காங்கிரசாவது
பிடிக்கவாவது!...
இப்ப எனக்கு மட்
டும் காங்கிரசு மேலே
பெரிய பக்தி பொத்து
கிட்டு கொட்டுதோ!
முதலாளி காங்கிரசு—அத
னால் நானும் காங்கிரசு!

கறுப்: முதலாளி ஏன் காங்
கிரசு?

பலவே: எம். எல். ஏ.க்கே நிக்
கப் போறாரு!...அதனால
காங்கிரசு!

கறுப்: சரிதான்! சுயேச்சையா
நின்னு சேர்மேன் ஆகி,
ஜில்லா போர்டு மெம்ப
ராகி, இப்ப காங்கிரசிலே
எம். எல். ஏ. வா?

பலவே: அதான் அப்பனே
இப்ப அரசியல் "பேஷன்!"
நம்ப நிதி மந்திரி டி. டி.
கிருஷ்ணமாச்சாரியாரிலி
ருந்து ராமசாமி படை
யாச்சி, மாணிக்கவேலு
நாயக்கர், இன்னும் எல்
லாப் பெரிய பிரமுகர்களை
யும் எடை போட்டுப்பாரு;
'கவு'மாகிறதுக்காகவே
காங்கிரஸ் ஆனவுங்க
தானே! காங்கிரஸ் ஒரு
கடல் அப்பா!...அதில்
நதிகளும் கலக்கும், சாக்
கடைகளும் வந்து விழும்.
ஆனால் கடல் கெட்டு
விடாது!...

கறுப்: பல வேஷம்!...பரவா
யில்லை...நல்லாப் பேசுறே!

பலவே: அய்யா எலக்‌ஷனுக்கு
மெயின் ஸ்பீக்கரே நான்
தானே!...இன்னொரு ஆள்
வேணுங்கிறதுக்காகத்
தான் உன்னைக் கூப்பிட
வந்தேன்.

கறுப்: கடல்ல சாக்கடை கலந்
தாலும் எது கலந்தாலும்

❀ தொடர்ச்சி 9-ம் பக்கம்

# ஏன் வேண்டும் இனப் திராவிடம்?

"தேசிய இனம் என்பது யாது? 'சரித்திர பூர்வமாகத் தோன்றிய பொதுவான மொழி, பிரதேசம், பொருளாதார வாழ்வு, மனோபாவம், போதுக் கலாச்சாரம் உடைய உறுதியான சமூகமே ஒரு தேசிய இனம்'—என்று ஸ்டாலின் வரையறுத்திருக்கிறார். இதனடிப் படையில் ஒவ்வொரு மொழியின ரும் ஒவ்வொரு தேசிய இனத்தவராவர். நம்மைப் பொறுத்தவரை நாம் தமிழர் என்னும் தேசிய இனத்தைச் சார்வோமே அல்லாது திராவிடர் என்னும் இனத்தைச் சாரமாட்டோம்." — எனவே இல்லாத திராவிட இனத்துக்காக ஒரு தனி நாடு கேட்பது ஆதாரமற்றது அல்லவா?

மறைந்து மதிப்பிழந்துவரும் ஸ்டாலினுடைய வார்த்தைகளைக் கொண்டு வளர்ந்து, வன்மை பெற்றுவரும் ஒரு மாபெரும் இயக்கத்தின் கொள்கைகளையே சிதைக்க நினைத்திருக்கிறார், கேள்வி கேட்டவர்.

குருஷேவ் கோஷ்டியினர் எவ்வளவு அலட்சிய மனோபாவத்துடனும், ஆர்வத்தோடும் ஸ்டாலினுடைய கொள்கைகளை வெட்டிச் சாய்க்கிறார்களோ, அதே போன்ற 'அலட்சிய மனப்பான்மை'யுடனேயே ஸ்டாலினுடைய சொற்களை ஈட்டிகளாக்கி நம்மீது பூட்ட நினைப்போரின் இந்தப் போலி வாதத்தையும் தவிடுபொடியாக்கி விடலாம்.

சரித்திரப் பூர்வமாகத் தோன்றிய பொதுவான மொழி; பிரதேசம்; பொருளாதார வாழ்வு; மனோபாவம்; பொதுக் கலாச்சாரம் உடைய சமூகம்தான் தேசிய இனம்—இது ஸ்டாலின் தெளிவுபடுத்தியிருக்கும் அரசியல் சித்தாந்தம்!

எனவே இந்த அடிப்படையில் ஒவ்வொரு மொழி பேசுவோரும் ஒவ்வொரு தேசிய இனமாகின்றனர்—இது 'திராவிடஸ்தான் வேண்டாம்' என்போரின் சித்தாந்தம்!

நாம் மறுக்கிறோம், ஒரே மொழி பேசுவோர் மட்டுமே ஒரு தேசிய இனம் என்ற கூற்றை!

உலக நாடுகளை ஒரு முறை மனக் கண்ணினால் திரும்பிப் பார்த்தால் 'ஒரு மொழி—ஒரு தேசிய இனம்' என்ற கொள்கை வலுப்பெற்றிருப்பதாகத் தெரியவில்லை!

பிரிட்டிஷ் தீவுகளிலே எத்தனை மொழிகள் பேசப்படுகின்றன?

ஒரே ஒரு போது மொழி—ஆங்கிலம்!

ஆனால் அந்தச் சின்னஞ் சிறிய நாட்டில் எவ்வளவு தேசிய இனங்கள் தெரியுமா இருக்கின்றன?

ஸ்காட்டிஷ்காரர்கள், வேல்ஸ்காரர்கள், இதர இங்கிலீஷ்காரர்கள் — என மூன்று தேசிய இனங்கள் இருப்பதாகத்தான் கூறுகிறார்கள், அரசியல் விற்பன்னர்கள்!

ஸ்விட்சர்லாந்து — அதுவும் சிறிய நாடுதான்! அங்கே ஒரே ஒரு தேசிய இனம்—ஸ்விஸ் அல்லது ஸ்விட்சர்லாந்துக்காரர்கள் என்ற ஒரே ஒரு தேசிய இனம்தான் இருக்கிறது.

ஆனால் அங்கே எத்தனை மொழிகள் தெரியுமா பேசப்படுகின்றன?

குறைந்த அளவு மூன்று மொழிகள்!

யூதர்கள் என்றும், சில ஆண்டுகள் முன்வரை சொந்தத்தில் நாடு இல்லாதவர்கள் என்றும் கேலி பேசிவந்தோமே அவர்கள் எல்லோரும் ஒரு தேசிய இனம்தான்!

ஆனால் அவர்களுக்கோ பல நூற்றாண்டுகள் வரையில் ஒரு பொது மொழி இருந்ததில்லை! அதேபோலவே ஒரு மொழி அவர்களிடையே நிலவாத காரணத்தால் அவர்களை 'ஒரு தேசிய இனம் அல்ல' என்று கூறியோரும் இருந்ததில்லை!

● "திராவிடஸ்தான் வேண்டுமா? வேண்டாமா?" என்ற தலைப்பில் போட்டி நடத்தியது சென்னை பத்திரிகை ஒன்று. அதில் "வேண்டாம்" என்பதற்காக வாதாடிய தோழர்களுக்குப் பதிலாக இந்தத் தொடர் கட்டுரையின் நாலாவது பகுதி இது...

ஒரே போது மொழி மூன்று தேசிய இனங்கள் — இங்கிலாந்திலே!

ஒரே தேசிய இனம்-மூன்று மொழிகள், ஸ்விட்சர்லாந்து பூமியிலே!

பொது மொழியே பல நூற்றாண்டுகள் வரை கிடையாது; இருந்தும் அவர்கள் ஒரு தேசிய இனம் — யூதர்களைப் பொறுத்தவரையில்!

அது மட்டுமா? ஒரு மொழி பேசுவோர் அனைவரும் ஒரு தேசிய இனம் — என்னும் கொள்கை பிழையுடையது என்பதை விளக்க இன்னும் எவ்வளவோ உதாரணங்களைக் காட்டலாம்.

கானடா நாடும், அமெரிக்க நாடும் ஒன்றையொன்று அடுத்தடுத்து, ஒரு குலையில் இருக்கும் இரு பழங்களைப் போல மிகவும் நெருங்கி இருக்கின்றன.

இரு நாட்டினரும் ஒரு மொழியைத்தான் பேசுகின்றனர்; ஆங்கில மொழியை!

இரு நாட்டினரும் ஒரு மொழி பேசுகிற காரணத்தால் இரு நாட்டு மாந்தரும் ஒரு தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள்—என்று கூறிட முடியுமா?

எதிர்ப்பர்; எள்ளி நகையாடுவர் அந்த மானிலத்தோர்!

ஒரு மொழி நிலவியபோதும் அமெரிக்கர் தனி தேசிய இனம்தான்! கனடியர்கள் தனி தேசிய இனம்தான்!

எங்கே தோழரே 'ஒரு மொழி—ஒரு தேசிய இன'க் கொள்கை? ஏன் தோழரே அந்த உன்னதக் கொள்கை, மேலே கண்ட நாடுகளில் உபயோகப்படாமல் உளுத்துப் போய்விட்டது?

ஸ்டாலின் கூறியிருக்கிறாரே அப்படி—என்று பதில் கூற நினைக்கலாம்!

ஸ்டாலின்மீது பழி சொல்வதில் நியாயமில்லை; அதைத் தவறான வழியில் பயன்படுத்தியிருக்கிறார், 'திராவிடஸ்தான் வேண்டாம்' என்ற நண்பர்!

மரம் என்பது என்ன?

உயரமான தண்டும், அகன்ட கிளைகளும், அதில் இலைகளும் கொண்ட தாவரம்தான் மரம்!—என்று ஒரு பெரியவர் பதில் கூறினர்!

இந்தப் 'பொதுக் கருத்தை' 'திராவிடஸ்தான் வேண்டாம்' என்று கூறும் தோழர் ஒரு முறை படித்துவிட்டு;

அகன்ட கிளைகளும், அதில் இலைகளும் கொண்டதுதான் மரம் என்று பெரியவர் கூறியிருக்கிறாரே; அதன்படிப் பார்க்கப்போனால் பனை மரத்துக்கும், தென்னை மரத்துக்கும், வாழை மரத்துக்கும், கிளைகள் கிடையாதே—என எண்ணிக் கொண்டு, பனை, தென்னை, வாழை—போன்றவைகளுக்குக் கிளைகள் இல்லாத காரணத்தால் அவைகளை மரங்கள் என்று சொல்ல முடியாது—எனத் திட்ட வட்டமாகக் கூறியிருக்கிறார்!

'சரித்திர பூர்வமாகத் தோன்றிய பொது மொழி' கொண்டிருப்பது தேசிய இனம் என்று ஸ்டாலின் கூறியது, நீண்டு வளர்ந்த, இலைகள் பொருந்திய கிளையுடையதுதான் மரம் என்பது போல; பொதுக் கருத்து!

அதை வைத்துக் கொண்டு ஒரே மொழி பேசுவோர் அனைவரும் ஒரு தேசிய இனம்; எனவே தமிழ் மொழி பேசும் தமிழர் ஒரு தேசிய இனம்; ஒரே குடும்பத்தைச் சேர்ந்த திராவிடர்கள் ஒரு தேசிய இனமாகக் கருதப்படமாட்டார்கள் என்பது—கிளைகள் இல்லாத காரணத்

✻ 8-ம் பக்கம் பார்க்க



One side page dark



# தலையங்கம்

உதித்துவிட்டான் செங்கதிரோன் தென்திசையில்
கொதித்தெழுவோம், கொத்தடிமை தீர்வதற்கே!

சென்னை 7-9-56 வெள்ளி

## நோக்கம் ஒன்றுதான்!

சாணிக்குப் போட்டிட்டு சாமி என்று கும்பிடச் சொல்லும் சனாதனவாதிகளைப் போல, சாக்காட்டின் அடிவாரத்தில் அமிழ்ந்து கிடக்கும் இந்தி மொழிக்கு மகுடம் புனைவித்து மகிழ்வதற்கு வடநாட்டு ஏகாதிபத்தியவாதிகள் இன்னும் பழைய தீவிரத்துடனேயே முயற்சிகள் பல செய்து கொண்டுதானிருக்கிறார்கள்.

சகோதரி என்பதற்காக உலகத்தின் பெரும் பெரும் நாடுகளின் தூதர் பதவியைக் கொடுத்து, அதற்குள்ள மதிப்புதனைக் குறைத்தவர்கள், தங்கள் தாய்மொழி என்பதற்காக கால் நொண்டி — சண்டியாம் இந்தி மொழிக்காரிக்கு ராஜ நடை சற்றுக் கொடுக்கிறார்கள்.

இலக்கியமில்லை; இலக்கணச் செறிவு கிடையாது — இருந்தும் குப்பை மேடுதனைக் கொலுமண்டபத்துக்கு அழைத்துவரும் பணி ஆர்ப்பாட்டங்களோடுதான் நடைபெறுகிறது!

அண்மையில் ராஜ்யக் கல்வி அமைச்சர்கள் மாநாட்டிலே பேசிய பண்டித நேரு இப்படிக் குறிப்பிட்டிருக்கிறார்:

"...ஆங்கிலம் சடந்த நூற்றாண்டில் இந்தியாவை ஒன்றுபடுத்தும் சாதனமாக விளங்கி வந்திருக்கிறது. அதுபோல ஆங்கிலத்திற்குப் பதிலாக இந்தியும் நாளடைவில் ஒன்றுபடுத்தும் சாதனமாக விளங்கவேண்டும்"

—பண்டிதரின் வாசகங்கள் இவை!

ஆங்கிலம் இருந்த இடத்துக்கு இந்தி வரவேண்டுமாம்!

ஆனால் இந்த உபகண்டத்தில் ஆங்கிலம் செய்துவந்த மகத்தான பணிகளை இந்தி மொழியால் சாதிக்க முடியுமா?

அதற்கும் பதில் கூறியிருக்கிறார், பண்டிதர்:

"விஞ்ஞான தொழில் நுட்பப் பயிற்சி ஆங்கிலத்திலேயே அளிக்கப்படவேண்டும். இது தெளிவாக்கப்பட்ட பிரச்னை... ஆங்கிலத்தை உபயோகிக்காவிட்டால் திட்டத்தை நிறைவேற்றுவது சாத்தியமல்ல."

—இந்தி மொழியின் கையாலாகாத்தன்மை இந்த வாசகங்களிலே தெளிவாகப் படம் பிடிக்கப்பட்டிருக்கிறது.

வாலிப நெஞ்சங்களுக்கு விஞ்ஞான அறிவுதனை ஊட்டுவதற்கு முடியாது, இந்தியெனும் மந்தி-காச முகவதியால்!

தொழில் நுட்பப் பயிற்சிக்குத் தேவையான நபர்களைத் தயார் செய்து கொடுக்கும் வன்மையும் கிடையாது, அந்த வளமிழந்த வறட்டு மொழிக்கு!

இருந்தும் அந்த பயனற்ற மொழியைத்தான் ஆங்கிலத்தின் ஸ்தானத்திற்குக் கொண்டு வரப்போகிறார்களாம், ஆளவந்தார்கள்!

உபயோகமற்ற மொழிக்கு ஊராளும் உத்தியோகம் தரப்படுகிறது!

விஞ்ஞான அறிவு தரும் தகுதி கிடையாது அதற்கு; ஆனால் தரணியாளும் தகுதி மட்டும் உண்டாம!

திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான விற்பன்னர்களை அளிக்க முடியாது, அந்த வீணான மொழியால்! ஆனால் அந்த அலங்கோல ரூபிணிக்குத்தான் அணிமணிகளைப் பூட்டி மகிழ்விக்கும் பொல்லாத வேலையிலே ஈடுபட்டிருக்கிறார்கள்!

அப்படியானால் அந்தப் பயன் தராத மொழிக்கு ஏன் 'பாதுகா பட்டாபிஷேகம்' நடத்தப் பார்க்கிறார்கள்?

அதற்கும், சற்று மறைமுகமாகவே காரணத்தை விளக்கிவிட்டார், பண்டிதர்!

"இதுவரை அரசியல், வர்த்தகம் எல்லாம் ஆங்கிலம் தெரிந்தவர்கள் கையில் இருந்ததால் அது நாட்டை ஒன்றுபடுத்தும் சக்தியாகத் திகழ்ந்தது ..கல்லூரிகளிலிருந்து வெளியேறி நாட்டின் பொருளாதார அரசியல் வாழ்வில் ஈடுபட்டவர்களும் ஆங்கிலத்தையே கையாண்டனர்."

—இப்படி ஆங்கிலத்தின் பெருமைபற்றி ஒரு பக்கம் விமர்சித்துவிட்டு,

"ஒன்றுபடுத்தும் சாதனமாக இந்தியை நாம் ஆங்கிலத்தின் ஸ்தானத்தில் எடுத்துக் கொள்ளலாம்"

—என்றும் உண்மையைக் கூறியிருக்கிறார்!

இதுவரையில் பிரிந்து - பிளவுபட்டு - பிணைப்பின்றி—சேர்ந்து நிற்கும் வகைகெட்டு இருந்த இந்த உபகண்டத்தை 'ஒன்று சேர்த்து வைக்கும் சாதனமாக' ஆங்கிலம் இருந்து வந்ததாம்!

இனிமேல் அந்த ஒன்றுபடுத்தும் சாதனமாக இந்தி இருக்க வேண்டுமாம்!

—உண்மையை ஒப்புக் கொண்டிருக்கிறார், பண்டிதர்!

ஆங்கிலம் எந்த நோக்கத்தை உள்ளடக்கி இந்த நாட்டிலே திணிக்கப் பட்டதோ, அதே நோக்கங்களுக்காகத்தான் இந்தியும் இங்கே திணிக்கப்பட இருக்கிறது!

பிரித்து உதறிய நெல்லிக்காய் மூட்டையைப் போலக் கிடந்த இந்திய உப கண்டத்தை ஒன்று படுத்த நினைத்தான்; அதற்காக ஆங்கில மொழியையும் திணித்தான், வெள்ளையன்!

ஏன்?

ஏகாதிபத்திய வலையை விரிப்பதற்காக; சுரண்டல் இயந்திரத்தைச் சுலபமாகச் சுற்ற விடுவதற்காக!

இப்போது அதே காரணங்களுக்காக இந்தி மொழியையும் அழைத்து வருகிறார்கள், ஆங்கிலத்தின் ஆசனத்தில் அமாத்துவதற்காக!

ஏன்?

விளக்க வேண்டுமா, என்ன? நிச்சயமாக வடநாட்டு ஏகாதிபத்தியம் என்கிற புதிய சுரண்டல் அமைப்பை லாபகரமாக இயக்குவதற்குத்தான்!

வெள்ளையன் போனான்; வடநாட்டுக் கொள்ளையன் வந்தான் என்கிற ரீதியிலே காரியமாற்றத் துவங்கி விட்டார்கள் டெல்லி பீடத்தின் காவலர்கள்!

இதைப்புரிந்துகொள்ள வலுவின்றி, வல்லூறு கையில் சிக்குண்ட வெண்புறாபோலிருக்கும் காமராசரோ, தன்மானத்தை வடநாட்டுத் தண்டல்காரர்களிடம் அடகு வைத்துவிட்டு, சில நாட்களுக்கு முன்னர் சென்னை தட்சிணப் பாரத இந்திப் பிரச்சார சபையிலே கௌரவப் பட்டம் பெற்றிருக்கிறார்!

கௌரவப் பட்டமாம், அது!—காமராசர் புளகாங்கிதத்துடன் பெற்றுக் கொண்டிருக்கிறார், அதை!

தமிழ் மொழியின் கௌரவத்தின்மீது காறி உமிழ்ந்துவிட்டு தமிழ் நாட்டின் கௌரவத்தின்மீது கரி பூசிவிட்டு, இந்தி மொழியெனும் வேசியளித்த முத்தத்திலே லயித்திருக்கிறார்; அதைக கௌரவமென்றும் கருதி களிப்பிலாழ்ந்திருக்கிறார், கழுதைக்கும் குதிரைக்கும் வித்தியாசம் தெரியாத காமராசர்!

தாய் மொழிக்கு இழிவு தேடி வைக்கும் அவர் போன்றவர்களுக்குத்தான் எச்சரிக்கை தரவேண்டியவர்களாயிருக்கிறோம்—'காமராசரே! இதுபோல் நீவிர் செய்துவரும் அரசியற் பாவ காரியங்களுக்குக் கழுவாய் தேடிக்கொள்ளும் காலமொன்று வரத்தான் போகிறது, விரைவில்; அதி விரைவில்'—என்று!

# ★ தி. மு. க.வும் தேர்தலும்! ★ சிங்கை ஏட்டின் கருத்து!

தேர்தலில் குதிக்கவேண்டாம் என்று பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் தி. மு. கழகத்திற்கு புத்திமதி கூறியுள்ளதாக பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

பெரியாரைத் தலைவராகக் கொண்ட திராவிடர் கழகத்திற்கு தேர்தல் வேலையில் நம்பிக்கை யில்லையென்றால் அது ஒதுங்கி நிற்பதும், தேர்தலில் இறங்கி, சட்டசபைக்குப் போய் தனது லட்சியத்திற்காகப் போராட நினைக்கும் தி. மு. க. அக் காரியத்திலீடுபடுவதும், அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் கட்சியார் போட்டியாக வரும் தி. மு. க. வைத் தாக்கிப் பேசுவதும், காங்கிரஸை எதிர்த்து தி. மு.க. பிரசாரம் செய்வதும் உலகமெங்கும் ஒப்புக் கொள்ளப்பட்ட, வழக்கத்திலுள்ள ஜனநாயக நடைமுறைகள்.

ஆனால் தேர்தல் வேலைத் திட்டத்தில் நம்பிக்கையில்லையென்று கூறும் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் காமராஜரை ஆதரிப்பதும் [இதன் மூலம் காங்கிரஸை ஆதரிப்பதும்] அதே சமயத்தில் தி. மு. க. வை எதிர்ப்பதும் அந்த ஜனநாயக நடைமுறைக்கு முரண்பட்டதாகத் தோன்றுகிறது என்பது அரசியல் கவனிப்பாளர்களின் அபிப்பிராயம். இதற்கு அவர்கள் கூறும் காரணங்கள் என்ன, அவை சரியா என்று பரிசீலிக்க வேண்டுமல்லவா?

தேர்தல் வேலைத் திட்டங்களிலும், சட்டசபைப் பிரவேசத்திலும் திராவிடக் கழகத்திற்கு நம்பிக்கை இல்லையென்றால், அவ்வித நடவடிக்கைகளில் நம்பிக்கைகொண்ட எந்த கட்சியையும் அது ஆதரிக்காமலிருந்துவிடவேண்டும். தேர்தலில் யார் ஜெயித்தால் என்ன, யார் தோன்றால் என்ன என்று கவலைப்படாமல் தன்னுடைய பாதையில் செல்வதுதான் பொருத்தம். அப்படியில்லாமல் எந்தக் கட்சியையாவது தி. க. ஆதரிக்கக் கடமைப்பட்டிருந்தால் லட்சிய அடிப்படையில் அது திராவிட முன்னேற்றக் கழகந்தானேயன்றி காங்கிரஸும் அல்ல; காமராஜரும் அல்ல.

திராவிடக் கழகங்களின் லட்சியத்திற்கும், காங்கிரஸ் லட்சியத்திற்கும் அடிப்படையிலேயே வேற்றுமை உண்டு. ஆனால் திராவிடக் கழகத்திற்கும், திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் அடிப்படை லட்சியங்களில் அதிக வித்தியாசமில்லை. இரண்டும் வடநாட்டுத் தொடர்பற்ற, தனி அரசுரிமை பெற்ற திராவிட நாடு கோருபவை. அதே சமயத்தில் காங்கிரஸோ வடநாட்டினரின் ஆதிக்கத்தினின்றும் தென்னாட்டிற்கு விடுதலை கோரும் இந்த லட்சியத்தை தீவிரமாக எதிர்த்துவருவது. இரண்டு கழகங்களும் நாட்டின் ஐக்கியத்தைக் குலைக்கப் பார்க்கின்றன என்று காமராசர் உள்பட எல்லா காங்கிரஸ் தலைவர்களும் பிரசாரம் செய்து வருகின்றனர். இந்த நிலைமையில் காங்கிரஸையோ காமராசரையோ ஆதரிப்பது அவர்கள் கழகங்களின்மீது சுமத்தும் குற்றச்சாட்டுகளை ஆதரிப்பதாகும்.

திராவிடக் கழகம் நாட்டின் நன்மைக்குக் கேடு செய்யக் கூடிய தென்கிறார் காமராசர். அப்படிக் கூறுகிறார் என்றால் என்ன அர்த்தம்? காமராசர் திராவிடக் கழகங்களின்மீது கூறும் குற்றச் சாட்டுகளைப் பெரியார் ஒப்புக் கொள்கிறார் என்பதுதானே? காமராசரை ஆதரிக்க முற்படுவதற்கு முன்னர் பெரியார் இதனைத் தெளிவாகக் கூறிவிட வேண்டும்.

இதைத் தெளிவாக்காமல் தேர்தலில் தி. மு. க. ஈடுபட்டால் அதைச் சேர்ந்தவர்களில் நாலைந்து பேர்கள் ஜெயிக்கலாம், அதனால் திராவிட நாடு லட்சியம் சித்தியாகிவிடுமா, இவர்களால் என்ன செய்ய முடியும் என்று பெரியார் அவர்கள் கேட்பதன் தாத்பரியத்தை என்னால் உணர்ந்து கொள்ள முடியவில்லை.

ஒரே லட்சியத்தைக் குறியாகக் கொண்டவர்கள் அதனை அடைய வெவ்வேறு வேலைத் திட்டங்களை மேற்கொண்டு தொண்டாற்றியது திராவிட இயக்கத்தில்தான் முதன் முதலாக நடக்கிறதென்பதில்லை.

இன்று அதிகாரத்திலுள்ள காங்கிரஸ் கட்சியிலும் இவ்வித மாறுதல் ஏற்பட்டிருக்கிறதென்பதை அதிலிருந்து சேவை செய்த பெரியார் ஈ. வெ. ரா. நன்கறிவார்கள். காங்கிரசின் ஆரம்பகால வரலாற்றைப் படித்தவர்களும் அறிவார்கள்.

காந்திஜி இந்தியாவில் ஒத்துழையாமை இயக்கம் நடத்திய காலத்தில், அதில் நம்பிக்கை கொண்டவர்கள் காந்திஜியின் தலைமையிலும், அதில் நம்பிக்கையில்லாமல் பார்லிமெண்டரி வேலைத் திட்டத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் சி. ஆர். தாஸ், பண்டித மோதிலால் நேரு—இவர்களின் தலைமையில் சுயராஜ்யக் கட்சி என்ற நிறுவனத்தின் கீழும் ஒரே நோக்கத்திற்காக சேவை செய்து வந்தது பலருக்கு நினைவிருக்குமென்றே நம்புகிறேன்.

"வேண்டுமானால் தி. மு. க. வைச் சேர்ந்தவர்களில் ஒரு சிலர் ஜெயித்து சட்டசபைக்குப் போகலாம்" என்று இப்போது பெரியார் அவர்கள் கூறுவதுபோல, அப்போது சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்த ஒரு சிலர்தான் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் பண்டித மோதிலால் நேரு, புலாபாய் தேசாய், முகம்மதலி ஜின்னா, சத்தியமூர்த்தி, ஆர். கே. சண்முகம் ஆகியோர் என்பது என்னுடைய ஞாபகம்.

இந்த நாலைந்து பேர்கள் அக்காலத்தில் மத்திய சட்டசபையிலிருந்துகொண்டு அந்நிய ஆட்சியின் சுரண்டலையும், யதேச்சாதிகாரப் போக்கையும் அம்பலப் படுத்தியதன் மூலமாகவும், வேறு வழிகளாலும் சுயராஜ்ய லட்சியத்திற்காகச் செய்துவந்த சேவை—அந்நிய ஆட்சியாளர்களை படுத்தி வைத்தபாடு தேச விடுதலைப் போராட்ட வரலாற்றில் ஒரு முக்கிய இடம் பெற்றிருக்கிறதென்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

அப்படியிருந்தும் இவர்கள் சட்டசபைக்குச் செல்வதை அப்போது காந்தியடிகள் விரும்பினாரா? இல்லை. தமக்கு விருப்பமில்லை என்பதற்காக எதிர்த்துப் பிரசாரம் செய்தாரா? அதுவுமில்லை. 'அவர்கள் தங்கள் போக்கில் போகட்டும். நான் என்னுடைய பாதையில் போகிறேன்' என்று காந்தியடிகள் தமது ஆக்க வேலைத்திட்டத்திலும் ஒத்துழையாமை இயக்க வேலைகளிலும் தீவிரமாக ஈடுபட்டு வந்தார். அதோடு பிரிட்டிஷார் இந்தியாவுக்கு சில நன்மைகள் செய்துள்ளார்கள். எனவே சுயராஜ்யக் கட்சியினரைவிட அவர்களே ஆட்சியில் தொடர்ந்து இருந்து விட்டுப் போகட்டும் என்று காந்தியடிகள் அபிப்பிராயம் தெரிவிக்கவும் இல்லை!

காங்கிரஸிலிருந்து தோன்றிய சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்தவர்கள் பார்லிமெண்டரி வேலைத் திட்டத்தை மேற்கொண்டு சட்டசபைக்குள் சென்று 'சுயராஜயக் கிளர்ச்சி' செய்ததைப் போலவே, திராவிடக் கழகத்திலிருந்து பிரிந்து சென்ற திராவிட முன்னேற்றக் கழகம் சட்ட சபைப் பிரவேச வேலைத் திட்டத்தை ஏற்றுக் கொண்டு தேர்தலில் குதிக்க முற்பட்டுள்ளது. எந்த வகையில் பார்த்தாலும் இதை தவறு என்று சொல்வதற்கில்லை.

தி. மு .க. அபேட்சகர்களிடம் பணம் இருக்கிறதா, இல்லையா என்பது தேவையல்லாத ஒரு கேள்வி. ஏனென்றால், அது அபேட்சகர்களாக நிற்கப் போகிறவர்கள் கவலைப்பட வேண்டிய ஒரு விஷயம். இன்று எம். எல். ஏ.க்களாக இருக்கும் அத்தனை காங்கிரஸ்காரர்களும்

✽ தொடர்ச்சி 10-ம் பக்கம்



## தேசியம் பேசுவோர் பற்றி அண்ணா!

"மலபாரில் உள்ள காடுகளில் சில மரங்களைவெட்டினார்களாம் சென்னை சர்க்கார்; 'மலபார் மலையாளிகளுக்கு என்றான பிறகு. அதில் மரம் வெட்டுவதா?' என்று ஏ. கே. கோபாலன் குமுறி யிருக்கிறார். 'மலபார் காட்டு மரம் தமிழருக்கானா லென்ன? மலையாளிகளுக்கானால் என்ன?' என்ற பெரு நோக்குக் கொள்ள முடியாதவர்கள் சர்வ தேசியம் பேசுகிறார்கள்!"



# பொழுதுபோக்கு

## 'டெமாஸ்தனீஸ்'

"அப்பா எனக்கு ஒரு சந்தேகம், அதிகார மில்லாத சட்டசபைக்கு, வெற்றிபெற்றுப் போய்தான் என்ன பிரயோசனம்?"—மகள் தந்தையை சந்தேகத்தோடு வினவினாள்.

தந்தை, மகளுக்கு அன்போடு விளக்கம் சொன்னார்: "நாம் விரும்புகிறோமோ இல்லையோ ஒரு அரசியலமைப்பு இப்பொழுது அமுலிலிருக்கிறது. அது மாகாண சட்டசபைகளை ஏவலாளியாகத்தான் கருதுகிறது. இந்த சூழ்நிலையில் நாம் இரண்டிலொன்றுதான் செய்யலாம். ஒன்று சட்ட சபையைப் புறக்கணிப்பது; மற்றொன்று தேர்தலை ஒரு சவாலாகவே ஏற்றுக் கொண்டு ஈடுபடுவது. இரண்டாவது நிலையைத்தான் நாம் இப்பொழுது ஏற்றுக் கொண்டிருக்கிறோம். தேர்தல் மக்களை நெருங்கி அவர்களுடைய உள்ளத்தை உணர்ந்து செயலாற்ற வாய்ப்பளிக்கிறது. தேர்தலின்போது நம்முடைய கொள்கையையும் குறிக்கோளையும் மக்களுக்கு எடுத்துச் சொல்லுவது தேர்தலில் வெற்றி பெறுவதைவிட முக்கியமானது. நாம் தேர்தலில் வெற்றி பெற்றால் அது நம்முடைய லட்சியத்தின் வெற்றியாகும்!"

"தோல்வியடைந்தால்......?"—மகள் குறுக்கிட்டுக் கேட்டாள்.

"அப்பொழுதும் ஒன்றும் குடி முழுகி விடாது. சட்டசபைக்குப் போவதாலேயே எல்லாம் சரியாகிவிடும் என்று நாம் நம்பவும் இல்லை. வெற்றி தோல்வி இதில் முக்கியமே இல்லை. இத்தனை ஆண்டுகளாக, மக்களிடம் சில கொள்கைகளைக் கூறிவந்திருக்கிறோம். இந்தக் கொள்கைகளுக்கு மக்கள் எந்த அளவுக்கு செவி சாய்த்திருக்கிறார்கள் என்பதை அறிய ஓர் வாய்ப்பு அவ்வளவுதான்!"

மேலே நான் குறித்திருப்பது தி. மு. க. பிரமுகர் ஒருவருக்கும் அவருடைய மகளுக்குமிடையே நடந்த உரையாடல் அல்ல; 1936ம் ஆண்டு தேர்தலில் போட்டியிடுவது என்று காங்கிரஸ் கட்சி முடிவு செய்த போது, திருமதி, விஜயலட்சுமி பண்டிட்டின் குமாரியான நயன தாராவிற்கும், தாராவின் தந்தையான ரஞ்சித் பண்டிட்டிற்கும் இடையே நடந்த உரையாடல்தான் இது! இந்த உரையாடலை நயன தாரா தான் எழுதியுள்ள "சிறை வாழ்வும், சாக்லேட் பலகாரங்களும்" என்ற நூலில் நான்காம் அத்தியாயத்தில் குறிப்பிடுகிறார்.

தேர்தலைப் பொறுத்த மட்டில், 1936ம் ஆண்டில் காங்கிரஸ் என்ன மன நிலையில் இருந்ததோ அதே நிலையில் தான் 1957ல் நடக்கவிருக்கும் பொதுத் தேர்தலைப் பற்றித் தி. மு. கவும் இருக்கிறது. அன்று வைசிராயிடம் குவித்து வைக்கப் பட்டிருந்த அதிகாரங்கள் இந்திய அரசியல் சட்டப்படி குடியரசுத் தலைவரிடம் உள்ளன. மக்களின் பிரதிநிதியாக விளங்கும் சட்டசபையை இஷ்டப் பட்டால் கலைத்து கவர்னராட்சியை நிறுவும் அதிகாரம் அன்று கவர்னரிடம் இருந்தது. அதே அதிகாரம் இப்பொழுது குடியரசுத் தலைவருக்கும் இருக்கிறது. இருந்தும் ஒரு அரசியல் கட்சிக்கு சட்டசபை நுழைவு ஏன் அவசியம் என்பதை விஜயலட்சுமியாரின் கணவர், வெகு அழகாக மக்களுக்கு விளக்கி யிருக்கிறார். இதையேதான் நாமும், பேசியும் எழுதியும் வருகிறோம். இருந்தாலும் நாம் தேர்தலில் ஈடுபடுவது பற்றிப் பொருமையால் புழுங்குவோருக்கும், அச்சம் காரணமாக அவலக் குரல் எழுப்புவோருக்கும், நான் மேலே குறித்துள்ள நிகழ்ச்சி தெளிவுபெறத் துணை செய்யுமல்லவா?

அவர்கள்தான் கண்ணிருந்தும் காணா...காதிருந்தும் கேளாத...கருத்திருந்தும்(?) அறியாத...அறிய அனுமதிக்கப் படாத...ஜீவன்களாயிற்றே!

✽

அடுத்து; தேர்தல் என்றவுடனேயே, எத்தனையோ அரசியல் காய்ச்சல்கள் ...... காய்ச்சல் என்றால் வேறொன்றும் இல்லை, ஜுரம்தான்! உதாரணமாகப் பாருங்கள். ஏழெட்டு மாதத்திற்கு முன்பு அஸ்வான் அணையைக் கட்டி முடிக்க எகிப்துக்குக் கடன் கொடுக்க அமெரிக்கா ஒப்புக் கொண்டது. ஆனால் இப்பொழுது திடீரென்று அது கையை விரித்து விட்டதால், சூயஸ் கால்வாயின் நிர்வாகத்தை எகிப்து எடுத்துக் கொள்ள, உலகில் ஒரு பெரிய நெருக்கடியே உண்டாகி விட்டது. அமெரிக்கா மனதை மாற்றிக் கொள்ளும்படியாக ஏழெட்டு மாதங்களில் அப்படி என்ன நடந்து விட்டது? விஷயம் இதுதான்: அஸ்வான் அணைக்கட்டு வேலைகள் முடிந்து விட்டால், நைல் நதிக்கரையோரமெல்லாம் பருத்திக் காடாகிவிடும். பஞ்சு நிறைய வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்யும் நிலை எகிப்துக்கு உண்டாகி விட்டால், அமெரிக்கப் பருத்திக்கு வெளி நாட்டில் கிராக்கி குறைந்துவிடும். இதை எப்படி அமெரிக்கப் பருத்தி முதலாளிகள் சகிப்பார்கள்? டல்லஸின் காதைக் கடித்தார்கள், டல்லஸ் ஐசன்ஹோவரைப் பார்த்தார். ஐசன்ஹோவர் அவருடைய குடியரசுக் கட்சியைப் பார்த்தார். அவர்களது கண் முன்னால் தேர்தல் அரக்கன் பயங்கரமாக நின்றான். பருத்தி முதலாளிகளின் வெறுப்பு—தேர்தலில் ஆளும் கட்சிக்குத் தோல்வி! எப்படி சமாளிப்பது நிலைமையை? குடியரசுக் கட்சி வரும் தேர்தலில் வெற்றியடைய, கொடுத்த வாக்குறுதி காற்றில் பறக்கவிடப் பட்டது.

தேர்தலுக்காக இவ்வளவு பெரிய அநீதியா என்று கேட்கலாம். நம் நாட்டில் பஞ்சசீலச்சீடர்கள் தேர்தலுக்காக எவ்வளவு அவசர அவசரமாகச் சீர்திருத்தச் சட்டங்கள் பிறப்பிக்கிறார்கள் — முதலாளி மனம் நோகாமல்!

தேர்தல் நெருங்க ஆரம்பித்தவுடனே கோழி ஜீரணமாகி விடவில்லையா? இன்னும் என்னென்ன ஜீரணமாகப் போகிறதோ பார்ப்போம்!

✽

மற்றொரு விஷயம்! இப்பொழுது 'காதி வஸ்திராலயத்தில்' கதர்த்துணி நிறைய வியாபாரமாகிறதாம். ஏது, ஆதரவு வலுக்கிறதே என்று எண்ணுகிறீர்களா? அதெல்லாம் ஒன்றுமில்லை, தேர்தல் 'ரெக்ரூட்'டுகள், காங்கிரஸ் வேஷம் போட்டுக் கொண்டு ஓட்டு வேட்டையாட, கதர்த்துணி வாங்குவதாக, 'காதி வஸ்திராலய' நண்பர் காதோடு காதாகக் கூறுகிறார். பாவம், அவர் உண்மையான காந்தி பக்தர். இப்பொழுது சோற்றுக்கு மட்டுந்தான் திண்டாடுகிறார். எல்லாம் வந்தேமாதரத்தின் அருள்!

✽

★★★★★★★★★★★★★★★★★★★★★

# தலைமைத் தளபதி

★ ✽ ★

நீண்டு பரந்திட்டது பால் நிறக்கோடுகள்
நீலத்திரை நிறம் மங்கியது
வண்டு விழியுடை வனிதை மலர் முகம் போல்
வாடிக்கையான ஓர்முகம் தோன்றியது
உண்டு உறங்கிட்ட உலகத்து மக்களை
உழைக்க அழைக்கும் ஊழியனை
கண்டு மகிழ்ந்திருந்தேன் காலச்சிற்பியவன்
கருமுகில் போர்வை களைத்தெழுந்தான்

இருளகற்றி ஒளி பரப்பி உலகம் நடத்திட
இவன் எவனுடை ஏவலனோ?
பருவ மழை இருந்தும் வாடும் பயிர்களை
பாதுகாக்கும் பகல் காவலனோ?
அரும்புகளை மலராக்கி மலரில் நிறம் தேக்கி
அழகைப் படைத்திடும் ஓவியனோ?
உருத்தெரியாமல் நொருங்கிய வைரத்தூளை
உருண்டை யாக்கினாற்போல் வந்தான்.

அழகி நிலக் கன்னியின் கவலைதீர்த்திட
அன்பாக அணைக்க வரும் காதலனோ?
பழகிய பல படைவீரர்களை நடத்துகின்ற
பக்குவம் பெற்ற தலைமைத் தளபதியோ?
அழகிய சோலைகள் நதிகள் மலைகள் யாவும்
அவன் வருகையை எதிர்பார்ப்பதேனோ?
அழகிய கவிதைகள் தொழில்கள் வளர்வதும்
அமுதத்தமிழ் வாழ்வதும்கூட அவனால்தானோ?

[ந. பெரியசாமி.]

★★★★★★★★★★★★★★★★★★★★★




### சென்ற இதழில்...

வெள்ளிக்கிழமை! தன்னைப் பெண் பார்க்க வருகிற அழகப்பனை கற்பனைக் கண்களால் சுவைத்தபடி திருக்குளத்தில் நீராடிக் கொண்டிருக்கிறாள் சிந்தாமணி. அப்போது, ஊரிலே 'மைனர்' ராகிய டைகரின் விஷமத்தால் கால் இடறி விழுந்து பிரக்ஞை இழக்கிறாள். அவளை லேடி டாக்டர் ஆனந்தியின் மருத்துவ மனைக்குக் கொண்டு போகிறார்கள். ஆனந்தி ஊரிலே நல்ல பெயர் எடுத்தவள்தான். ஆனால் பால கங்காதரத் தேவர் என்பவரின் வலையில் சிக்கி கற்பை இழந்தவள். இப்போது டைகரிடம் ரகசிய கட்டு கொண்டிருக்கிறாள்.

இதற்கிடையில் வேதபுரம் நோக்கி வந்து கொண்டிருந்த மாப்பிள்ளை அழகப்பனும், நண்பன் நயினா முகம்மதுவும், அன்னை தாயாரம்மாளும் டைகரின் ஆட்களால் தாக்கப்படுகின்றனர். நயினா முகம்மதுவின் தந்திரத்தால் தப்பி, சிவநேசரின் இல்லம் அடைகிறார்கள். ஆனால் சிவநேசரும், மனைவி சிவகாமியும் மருத்துவ மனைக்குச் சென்று பெண்ணைப் பார்க்க வேண்டாமென்று தடுக்கின்றார்கள். ஆனால் அழகப்பனும் நண்பனும் தெரியாமல் மருத்துவ மனைக்குப் போய் விடுகிறார்கள். அங்கே டைகரின் சூழ்ச்சித் திட்டம் உச்ச கட்டத்தை அடைந்திருக்கிறது. சிந்தாமணியின் படுக்கையில் அவளுக்குப் பக்கத்தில் சிசு ஒன்று கிடக்கிறது. நர்சு "பிரசவமாகியிருக்கிறது" என்கிறாள்.

அழகப்பன் துடித்து, ஊருக்குப் புறப்பட்டு விடுகிறான். அப்போது காரின் முன்னே வந்து விழுகிறாள் ஆனந்தி. சிந்தாமணி களங்க முள்ளவள் என்று பொல்லாங்கு கூறி, பின் மனசாட்சிக்குப் பயந்து, அவளை மாசிலிருந்து மீட்க வேண்டி வந்தவள்தான் விபத்தில் சிக்குகிறாள். அவளை பாலூர் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்கிறார்கள். அங்கும் வந்துவிடுகிறான் டைகர். எங்கே ஆனந்தியால் தன் சூழ்ச்சித் திட்டம் வெளிப்பட்டு விடப்போகிறதோ என்று அஞ்சிய அவன், ஆனந்தி அவர்களிடம் சிந்தாமணியை வேண்டுமென்றே 'புது மலர்' என்று பொய் சொல்லுகிறான்—எனச் சாதுரியமாகப் பேசுகிறான். நம்புகின்றனர் அழகுவும், நயினா முகம்மதுவும். ஆனந்தியின் தூய உள்ளத்தைப் புகழ்கிறார்கள். இருவருமே அவளிடம் மனதைப் பறிகொடுக்கிறார்கள்.

முடிவில் அழகப்பன் தன் தாயாருடன் பெங்களூர் புறப்படுகிறான். ஆனந்தியின் அன்பைப் பெறும் நோக்குடன், பாலூரிலேயே தங்குகிறான் நயினா.

இதற்கிடையே சிந்தாமணி 'வழுக்கி விழுந்தாள்' என்ற பேரிடியைத் தாங்க முடியாத சிவநேசரும், சிவகாமியும் வேதபுரம் மருத்துவ மனைக்குப் போகிறார்கள். அங்கே சிந்தாமணியைக் காணோம். மகள் மானமிழந்தாள் என்று நம்பிய சிவநேசருக்கு புத்தி பேதலித்துவிடுகிறது. பெற்ற குழந்தையுடன் எங்கேயோ ஓடி விட்டாள் சிந்தாமணி என ஊரார் பழிக்கிறார்கள்: இழித்துரைக்கிறார்கள்.

அன்று இரவு, இத்தனை இன்னலுக்கும் காரணமான டைகர் சிவநேசரின் வீட்டுக்கு வந்து, சிந்தாமணியைத் தேடி அழைத்து வருவதாகக் கூறுகிறான். அவளைத் தனக்கே மணம் முடித்து வைக்க வேண்டுமென்றும் நிபந்தனை விதிக்கிறான். தத்தளித்துக் கொண்டிருந்த தாய் "என் மகள் உனக்கே" என்று சத்தியம் செய்கிறாள். 'சிந்தாமணி தனக்குத் தானே!' என்று எண்ணிய டைகர் பூட்டி வைத்திருந்த அவளை வீட்டுக்கு அனுப்பி வைக்கிறான்.

பாலூர் மருத்துவ மனையில் பலகணிப் பக்கம் கைத் துப்பாக்கியுடன் ஓர் உருவம் காத்திருப்பதையும் கவனியாது, ஆனந்தியின் நித்திரை அழகை ரசித்துக் கொண்டிருக்கிறான் நயினா முகம்மது...அப்போது அங்கே வந்த நர்ஸ், மருந்துச் சீசாவை மேசையின்மேல் வைத்து விட்டுப் போகிறாள். ஆனால் அந்த மர்மமான கரிய உருவமோ மருந்து சீசாவில் விஷத்தைக் கலந்து விடுகிறது... அதை கவனியாத நயினா, ஆனந்தி விழித்ததும், ஆர்வமுடன் மருந்தைக் கொடுக்கப் போகிறான்.

அதை விஷம் என்று கண்ட ஆனந்தி நயினாவின் மேல் சந்தேகம் கொள்ளுகிறாள். ஆனால், விஷம் இருந்த சிமிழைப் பார்த்தபோது, அது வேதபுரத்தில் தனது மருத்துவ மனையில் இருந்தது—என்பதை உணருகிறாள். நயினாவின் மேல் தவறாக சந்தேகித்ததாகக் கூறுகிறாள். அப்போது திடீரென்று துப்பாக்கி வேட்டு சப்தம் எழும்புகிறது! நயினா முகம்மது வெளியே ஓடுகிறான். அங்கே டைகர், மருத்துவ மனைக் காவலாளியைச் சுட்டு விட்டான் என்று தெரிகிறது. டைகர் போலீசாரால் கைது செய்யப்பட்டு போலீஸ் வண்டியில் கொண்டு செல்லப்படுகிறான். நயினா, ஆனந்தியிடம் நடந்த விஷயங்களைக் கூறுகிறான். ஆனந்தி நயினாவிடம் மனம் விட்டுப் பேசி, டைகரின் தீய செயல்களை விளக்கி, சிந்தாமணி களங்கமில்லாதவள் என்று நம்பும்படிச் செய்கிறாள். ஆனந்தியின்மீது தனக்குள்ள காதலை வெளிப்படுத்துகிறான் நயினா. அவளோ தான் டைகரின் வைப்பாட்டி என்ற உண்மையைக் கூறுகிறாள்.

தாயாரின் வாயிலாக செய்தி அறிந்த சிந்தாமணி, ஆனந்தியைக் கண்டு விபரீதத்திற்கு விளக்கம் பெற பாலூரை நோக்கி ஓடுகிறாள், அந்த இரவில்! அப்போது கைதியாக போலீஸ் வானில் செல்லும் டைகர், அவளைக் கண்டதும் கீழே குதித்து விடுகிறான். அவனிடமிருந்து தப்ப விரும்பிய சிந்தாமணி ஓடுகிறாள். இறுதியில் பெங்களூர் போகும் புகை வண்டியில் ஏறுகிறாள். கார் பழுதாகி விட்ட காரணத்தால் அழகப்பனும், அவன் தாயும் முதல் வகுப்பில் பிரயாணம் செய்யும் அதே வண்டியில், டைகரும் கடைசிப் பெட்டியில் தொத்திக் கொள்ளுகிறான்.

ஆனால், கள்ளத்தனமாக அபின் கடத்தும் ஒருத்தி, போலீசாரிடம் சிக்கிக் கொள்ளும் தருவாயில், பழியை தந்திரமாக சிந்தாமணியின் மேல் சுமத்துகிறாள். பெங்களூர் ரயில் நிலையத்தில் சிந்தாமணி கைது செய்யப்படுகிறாள். அதை கண்ட டைகர், செய்வதறியாது நிற்கும்போது, ரயிலிலிருந்து இறங்கிச் செல்லும் அழகப்பனைத் தொடர்ந்து சென்று அவனது வீட்டு முகவரியைத் தெரிந்து கொள்ளுகிறான்.

ஒரு வாரம் சென்றபின் அழகப்பனிடம் டைகர் வந்து, ஆனந்தி இறந்து விட்டதாகவும், நயினா வீட்டிலிருந்த நகை நட்டுக்களோடு ஓடி விட்டதாகவும் புளுகி, ஆயிரம் ரூபாய் பணம் பெற்றுப் போகிறான். அவன் போனதும் அழகுக்கு சந்தேகம் வருகிறது. பிரித்துப் படிக்கிறான்...

அதில், "ஆனந்தி நலமடைந்து வேதபுரத்திற்கு வந்து விட்டாள்" என்று நயினா எழுதியிருக்கிறான்.

சிந்தாமணிக்கு மூன்று மாதக் கடுங்காவல் என்ற செய்தியை நயினா படித்துக் காட்டுகிறான். அப்போது சிவநேசர் தற்கொலை செய்து கொண்டார் என்ற செய்தியுடன் வேம்பு வருகிறான்...

சிறையிலே இருந்த சிந்தாமணியை திடீரென்று ஒரு தேவர் ஜாமீனில் விடுதலை செய்து, ஆப்பீல் செய்கிறார். அவர்தான் பால கங்காதரத் தேவர் என்று அவள் அறிகிறாள்.

தந்தை இறந்த சேதி கேட்ட சிந்தாமணி தாயாரைக் காணத் துடிக்கிறாள். தேவர், பெங்களூரில் உள்ள வேலைகளைப் பார்த்துவிட்டு, பிறகு வேதபுரம் வருவதாகவும், சிந்தாமணியும் தாயாரை சந்தித்து விட்டு பெங்களூர் புறப்படத் தயாராக இருக்க வேண்டுமென்றும் கூறுகிறார். அவளும் சம்மதித்து வேதபுரம் வருகிறாள். வேதபுரத்தில் இருளடைந்த வீட்டில் தாயின் பிணம் உத்திரத்தில் தொங்குகிறது. பிறகு......

**19**

சிவகாமிக்கு சாவைத் தவிர வேறு என்னதான் வழியிருக்கிறது? மகளும் போய்விட்டாள். மானமும் போய் விட்டது. இறுதியில் "மாங்கல்ய"மும் போய்விட்டது. ஒரு முழக் கயிற்றைத் தவிர அவளுக்கு அமைதி அளிக்கக் கூடிய சாதனம் வேறு எதுவுமேயில்லை யென்றாகிவிட்டது. தாயும் தந்தையும் தங்களின் வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொண்டு பிணமாகி விட்டார்கள், சிந்தாமணியை மட்டும் நடைப் பிணமாக ஆக்கி விட்டு! தாயின் காலைக் கட்டிக் கொண்டு சிந்தாமணி கதறினாள். "இனி எனக்கு யாரம்மா நாதி" என்று புலம்பினாள்.

"அம்மா! என்னைப் பெற்று வளர்த்துசீராட்டிப்பாராட்டி, செப்புச் சிலையே! செந்தமிழே! —என்றெல்லாம் தாலட்டுப் பாடி, தரையில் படலாமோ என் தங்கத்தின் பாதம் என்று இடுப்பில் சுமந்து இடையறாத் துயர்களை யேற்று, என் வளர்ச்சி, வளம், நலம், இவைகளிலேயே நாட்டங்கொண்டு இறுதியில் இப்படி நலிந்து போனாயே; ஏனம்மா? நாம் யாருக்கு என்ன தீங்கம்மா செய்தோம்? நமக்கு ஏன் தாயே இப்படியெல்லாம் கொடுமைகள்? அய்யோ! உன் வயிற்றில் நான் ஒரு ஆணாகப் பிறந்திருக்





கக் கூடாதா? ஆணாகப் பிறந்திருந்து, கற்பு நெறி தவறி நடந்திருந்தால்கூட இந்த உலகம் மன்னித்திருக்குமே! இப்படியெல்லாம் பழி சுமத்திப் பழிப்புக் காட்டியிருக்காதே! பெண்ணாக நான் பிறந்ததால் தானே இல்லாத பழியைச் சுமத்தி பொல்லாத வார்த்தைகளால் நம் குடும்பத்தையே அடியோடு பொசுக்கித் தள்ளி விட்டது! அம்மா! இனிமேல் யாரையம்மா நான் அம்மா என்று ஆசை நிரம்பக் கூப்பிடுவேன்? யாரம்மா இருக்கிறார்கள்? வயதான காலத்தில் மகள் வீட்டில் போய், நீட்டிய காலை மடக்காமல் நிம்மதியாக உட்கார்ந்து கொண்டு சாப்பிடுவேன் என்று எல்லோரிடமும் அடிக்கடி கூறுவாயே; மகள் வீடே இல்லையென்று ஆகிவிட்டதே உனக்கு! மயான வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாயே! நீதான் என்ன செய்வாய்? மகளை விபச்சாரியென்று கூறும்போது அதைக் கேட்டுக் கொண்டு தாய் உள்ளம் எப்படித்தான் கொதிக்காமல் அமைதியாக இருக்கமுடியும்! விபச்சாரி மட்டுமா? சிறைப் பறவையும் ஆகிவிட்டாள்; அதுவும் கேவலமான தொழிலில் ஈடுபட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு! உன்னால் எப்படித்தான் உயிர் வைத்துக் கொண்டிருக்க முடியும்! இவ்வளவுக்கும் யாரம்மா காரணம்? யார் காரணம்? அந்த அக்கிரமக்காரன் டைகர்! அந்த அநியாயக்காரி ஆனந்தி!...... அவள்தான் என்னையும் என் குடும்பத்தையும் இழிவுப் படுகுழியிலே தள்ளியவள். அவளைப் பழிதீர்த்துக்கொண்டால் தான் என் மனம் அமைதி அடையும்!

"குடும்பத்தைக் கெடுத்த கொலைகாரி! ஒரு பெண்ணின் வாழ்வைப் பலியாக்குகிறாளும் அக்கிரமமாக—என்று எள்ளளவும் எண்ணிப் பார்க்காத பெண்ணுருவப் 'பேய்'! அவளைப் பழி வாங்குவதே எனக்கு முதல் வேலை! அவளை அழித்து விட்டுத்தான் மறுவேலை! அவள் உயிரோடு இருக்கக் கூடாது! இருந்தால் இன்னும் எத்தனை பெண்களின் எதிர்காலத்திற்கு "எமனா"க வருவாளோ; யார் கண்டது? இதோ. இப்போதே போகிறேன். அந்த ஆனந்தியைப் பழிவாங்கிவிட்டுத் திரும்புகிறேன்! சிந்தாமணி! நீ கொலைகாரியாகவும் மாறு! இனியென்ன மிச்சமிருக்கிறது, பட்டம்? விபச்சாரி! மோசடிக்காரி!! அடுத்தது கொலைகாரி!!!

"அம்மா, உன்னைப்போல தற்கொலை செய்துகொண்டு சாக மாட்டேன் நான்! நான் சாவதற்குள் ஒரு நல்ல காரியத்தைச் செய்துவிட்டுச் சாகிறேன். நான் செய்யப்போகும் காரியத்திற்கு சாவுதான் எனக்குப் பரிசாகக் கிடைக்கும்! உன்னைப் போல உலகத்துக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டு சாக வேண்டியதில்லை நான்! பகிரங்கமாகத் தக்கப் பாதுகாப்புடன் மணியோசை முழங்கத் தூக்கு மேடையில் என் உயிரை வாங்குவார்கள்! புராணீகர்கள் கூறுவது உண்மையாயிருந்து, நீங்கள் இருவரும் தேவலோகத்திலே யிருப்பீர்களேயானால் அங்கே வந்து, ஆனந்தியைக் கொன்றுவிட்ட ஆனந்தமான செய்தியை உங்களுக்குச் சொல்லுவேன்! இப்போது தானம்மா தேவலோகம் என்று உண்மையிலேயே ஒன்று இருந்தால் எவ்வளவு நன்றா யிருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது! இதோ; நான் என் வேலையை முடித்து விட்டு வருகிறேன். ஆனந்தி! உன்னைப் பழிக்குப்பழி வாங்குகிறேன்! என் குடும்பத்தைக் குலைத்துவிட்டு நீ கோலாகலமாக வாழ முடியாது! நீயும் எங்களோடு வரவேண்டியவள் தான்!"

—ஆவேசங் கொண்டு தன்னையறியாமல் கத்தினாள் சிந்தாமணி. தாயின் பாதங்களைக் கண்களில் ஒத்திக் கொண்டாள். வெறி பிடித்தவள் போல வீட்டை விட்டு வெளியேறி ஆனந்தி மருத்துவ மனையிருக்கும் தெரு நோக்கி ஓடினாள். அவள் கையிலே ஆனந்தி அகப்பட்டால், அவளைக் கிழித்துக் கொன்று போட்டுவிட்டுத் தான் அடுத்த அடி வைப்பாள்; எவ்வளவு பழியுணர்ச்சி பெருக்கெடுக்கத் துவங்கியது அவள் உள்ளத்தில்!

* * *

எப்படி யெப்படி மாறுதல்கள் மலர்கின்றன பார்ப்போம் என்று கவனித்துக் கொண்டிருந்த நயினா, தன் அறையில் தூக்கமின்றித் தவித்துக் கொண்டிருந்தான். ஆனந்திக்கும் அழகப்பனுக்கும்கூட ஒரு வேளைத் தொடர்பு ஏற்பட்டிருக்குமோ என மயங்கியது ஒரு சமயம் அவன் உள்ளம்! சேச்சே...இருக்காது என்று தேற்றிக் கொண்டது ஒரு சமயம்! ஆனந்தி, தன் பழைய கதையை அவனிடம் சொன்னதால்தான் அவனுக்கு அவள் மீது அவ்வளவு ஐயம் எழ ஏதுவாகிவிட்டது. வீண் சந்தேகத்தால் குழம்பிக் கொண்டிருப்பானேன்; ஒரு சோதனை நடத்தி அவளைப் பற்றிப் புரிந்து கொள்ளலாமே யென்று முடிவு கட்டினான் நயினா. அழகப்பன்மீதும் அவள் வலை வீசுகிறாள் என்றால், இரவு எப்படியும் அவன் அறைக்கு வந்தே தீருவாள். அப்படி அவள் அழகப்பன் அறைக்கு வரும்போது அங்கே தானிருந்து அவளைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டால்...?

—இப்படியொரு கேள்வியைப் போட்டுக் கொண்டு, தன் சோதனையை செயல் படுத்த முனைந்து எழுந்தான். தன் அறையிலிருந்து அகன்று அழகப்பன் அறைக்குப் போனான். அழகப்பனும் தூக்கமின்றிப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். நயினா அங்கு பிரவேசித்து, "இங்கு கொசுக்கடி அதிகமாயிருக்கும். நான் படுத்திருக்கும் அறையில் நல்ல கொசுவலை யிருக்கிறது; அங்கு போய்ப் படுத்துக் கொள்ளலாமே" என்று கூறினான். அழகப்பன் முதலில் வேண்டாமென்றுதான் கூறினான். ஆனாலும் அவனுக்கும் ஒரு ஆசை; ஆனந்திக்கும் நயினாவுக்கும் தொடர்பு இருக்கிறதா என்று கண்டுபிடித்து விட வேண்டுமென்று! ஒரு வேளை நயினாவின் அறைக்கு அவள் வர நேர்ந்தால் அவனிடம் தானே மனம் விட்டுப் பேசி நிலைமையைச் சீர் செய்து விடலாமென்றும் எண்ணியிருந்தான். நயினா வலியுறுத்தியதின் பேரில், அழகப்பன் நயினாவின் அறையில் போய்க் கொசுவலைக்குள் படுத்துக் கொண்டான். நயினாவும் அழகின் அறையில் படுத்தவாறு தூக்கமின்றித் தவித்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. எழுந்து வந்து உற்றுக் கவனித்தான். மறைந்து மறைந்து ஒரு பெண் வருவது தெரிந்தது. சப்தம் காட்டாமல் அறைக்குள்ளே போய்க் காத்திருந்தான். யாரும் வரவில்லை. மெதுவாக எழுந்து வந்து பார்த்தான். யாரையும் காணவில்லை. மறுபடியும் அறைக்குள்ளே சென்று கவனித்துக் கொண்டிருந்தான். மீண்டும் யாரோ நடந்துவரும் ஓசை, அந்த நள்ளிரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு வந்தது. நயினா, ஒளிந்தவாறு ஒலி வரும் திக்கில் நாட்டம் செலுத்தினான். ஆனந்திதான் அது!...அவள், அழகு படுத்திருக்கும் அறைக்குள்ளே போய்க் கொண்டிருந்தாள். அவள், அந்த அறையில் நயினா தான் படுத்திருப்பான் என்று கருதி அங்கு போகிறாள். நயினாவுக்கு அவள் மீதிருந்த சந்தேகம் பெரும் பகுதி நீங்கி விட்டது: உண்மையிலேயே அவளுக்கு அழகப்பன் மீது கண்ணிருக்குமானால் தான் இருக்கும் அறைக்கல்லவா வந்திருக்க வேண்டும்—அவளோ தான் வழக்கமாக உறங்கும் அறைக்கல்லவா போகிறாள்! —நயினா தனக்குத் தானே வெட்கத்தால் தலை குனிந்து கொண்டான். ஆனாலும் அடக்க இயலாத ஆவலொன்று அவன் இருதயத்தில் பீறிட்டுப் புறப்பட்டது. அழகப்பன் அறையில் என்ன நடக்கிறது என்று அறிய வேண்டி, அதை நோக்கி மெதுவாக நகர்ந்தான்.

கொசு வலைக்குள்ளே 'குறு குறு' வென்று விழித்துக் கொண்டிருந்த அழகப்பனின் மீது ஒரு மெல்லிய பூங்கரம் பட்டது. அழகப்பன் அந்த ஸ்பரிச இன்பத்திலே மெய் மறந்து அசையாது படுத்திருந்தான். அதே சமயம் நயினா முகம்மதும் அறைக்கு வெளியே கதவுப் புறம் வந்து ஒளிந்து கொண்டு, காதைத் தீட்டி வைத்துக்கொண்டு அமர்ந்திருந்தான்.

"தூக்கமா?" என்றாள், அழகப்பன் கன்னத்தை வருடியபடியே ஆனந்தி!

உரத்த குரலில் பேசினால் குரல் புரிந்துவிடுமென்று எண்ணியோ என்னவோ, அழகப்பன் ஈன சுரத்தில்.

"இல்லை" என்றான்.

"அவர் எங்கே?"

"அவன் அந்த அறையில் படுத்திருக்கிறான்."

இந்த உரையாடல் ஒளிந்திருக்கும் நயினாவின் உள்ளத்தை ஒரு உலுக்கு உலுக்கியது!

"என்மீது உங்களுக்கு ஏதாவது சந்தேகமா?"

"ஏன்?"

"அவர் என்னிடம் நடந்து கொள்கிற முறை...அவ்வளவு சரியாக இல்லை!"

"பரவாயில்லை!"

அழகப்பனுக்கு இப்போது நாக்கு பேச எழவில்லை. உடல் பதறியது. வெகு விரைவில் தான் யார் என்பதைத் தன் செய்கை மூலம் வெளிப்படுத்தி விட்டான்.

"யார் நீங்களா?" என்று துள்ளியெழுந்தாள் ஆனந்தி. அவள் கரத்தை அழகப்பன் விடாமல் பற்றிக்கொண்டான்.

"விடுங்கள் தயவு செய்து என்னை!" என ஆத்திரமாகப் பேசினாள் அவள். அந்தக் கனல் தெறிக்கும் வார்த்தைகள் நயினாவுக்குக் களிப்பூட்டின.

"ஆனந்தி! உன்னால்தான் என் வாழ்வு மறுமலர்ச்சி பெற வேண்டும்—நான் மிகவும் நொந்து போயிருக்கிறவன்! என்னைக் காப்பாற்று!" எனக் கெஞ்சுங் குரலில் கேட்டான் அழகு.

வெளியிலிருந்தவாறு இந்தச் சொற்களைக் கேட்ட நயினாவுக்குக் கண் கலங்கியது. தன் நண்பனின் நிலைமை கண்டு சோக பிம்பமானான் நயினா...

அப்போது அறைக்கு எதிர்ப்புறமாக சிறு ஒலியெழவே திரும்பிப் பார்த்தான். யாரும் அவன் கண்ணில் படவில்லை. ஆனால், ஆனந்தி அங்கு வருவதற்கு முன்பே வந்துவிட்ட சிந்தாமணி, நயினா முதலியவர்களின் பார்வையில் விழாமல் வேறு பக்கம் போய்ப் பதுங்கிக் கொண்டாள்.

ஒலி வந்த பக்கம் எதுவுமில்லை யெனக் கண்டு, மீண்டும் அறையின் பக்கம் கருத்தைச் செலுத்தினான் நயினா.

ஆனந்தி, அழகப்பனிடம் கையை விடுமாறு மன்றாடிக் கொண்டிருந்தாள். அவனோ, 'என்னை உயிரோடு கொன்று விடாதே!' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டேயிருந்தான்.



# இன்றில்லாவிட்டால் நாளை; இல்லையேல் நாளை மறுநாள்!

✻ 2-ம் பக்கத் தொடர்ச்சி

தால் பனை, தென்னை, வாழை போன்ற தாவர வர்க்கங்களை மரம் அல்ல, என்று கூறுவதைப்போல!

ஒரே மொழி தேவையில்லையெனில் திராவிடர்கள் ஒரு தேசிய இனம் என்பதற்கு என்ன ஆதாரங்கள் இருக்கின்றன?—என அடுத்துக் கேட்கத் தூண்டும்.

சுருங்கச் சொல்ல வேண்டுமானுல் 'தேசிய இனம்' என்பது ஒரு அரசியல் மதம்! ஆனுல் தவிர்க்க முடியாத; தேவைப்பட்ட; தீங்கு செய்யாத மதமாகும்!

பேராசிரியர் ஜே. எச். ரோஸ் தேசிய இன மென்பது 'ஒரு குடும்பப் பற்று' என்கிருர்!

இதற்குத் துணை புரிவது போல் பேராசிரியர் சிம்மர்ன் என்பவர், "பொதுவாகக் கூற வேண்டுமானுல் ஒரு மக்கட் பிரிவு தாங்கள் ஒரு தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்று உணர்வார்களேயானுல் அவர்கள் தனி தேசிய இனமாகி விடுகின்றனர்" என்று கூறுகிருர்.

அப்படியானுல் ஒரு மக்கட் பிரிவு தாங்கள் தனியொரு தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை உணர்வதற்கு என்னென்ன அம்சங்கள் தேவைப்படுகின்றன?

1. பூகோள ஒற்றுமை.
2. இன ஒற்றுமை.
3. பொதுவான கலை, கலாச்சாரம் கொண்டிருத்தல்.
4. மொழி ஒற்றுமை.
5. மத ஒற்றுமை.
6. பொது பொருளாதாரப் பிணைப்புகள்.
7. அன்னியர் தங்களை ஆதிக்கம் செலுத்துவதாக ஏற்படும் உணர்ச்சி; அதனுல் ஏற்படும் ஒற்றுமை—ஆகியன.

—இந்த ஏழும்தான் தேசிய இனத்துக்கு உரிய பெரும்பான்மையான குணங்களாகும்.

ஏழும் இருந்தால்தான் ஒரு மக்கட் பிரிவு தேசிய இனமாகும் என்பதல்ல! ஏழில் சில வலுவாக இருந்தாலே போதுமானது.

(1) பூகோள ஒற்றுமை.

இதுபற்றி சென்ற கட்டுரைகளிலேயே தெளிவுபடுத்தியிருக்கிருேம். திராவிடமென்கிற தென்னகத்தின் பூகோளம் தனித்தன்மை கொண்டது; வட இந்தியாவிலிருந்து முற்றிலும் மாறுபட்டது; தனித்து இயங்குவதற்கேற்ற வளங்கள் பல கொண்டது. இதை யாரும் மறுக்க இயலாது.

(2) இன ஒற்றுமை.

இதுதான் மாற்றுக் கட்சியினர் கூடாரத்திலிருந்து மாபெரும் கூக்குரலை எழுப்புகிற பிரச்சினையாகும்.

ஆரியராவது திராவிடராவது—என்று கொட்டாவி விட்டபடியே கூவி நம் கோரிக்கையைத் தட்டிக் கழிக்கப் பார்க்கிருர்கள் சில ஆஸ்தான கவிஞர்கள்!

ஆரிய இரத்தமும் திராவிட இரத்தமும் கலந்துவிட்டது—என்று கர்ஜனை புரிகிருர் ஆச்சாரியார்!

ஆச்சாரியார் கூறுவதைப் போல வாதத்திற்காக ஆரிய இரத்தம், திராவிட இரத்தத்தோடு கலந்து விட்ட தெனக் கருதினுல்கூட, அது வட நாட்டிலே மற்ற இனங்களோடு கலந்ததைவிட தென்னகத்தில் மிகக் குறைந்த அளவுக்குத்தான் கலந்திருக்கிறது என்பதை எந்தச் சரித்திராசிரியரும் மறுக்க முடியாது.

(3) பொதுவான கலை, கலாச்சாரம்.

இதுவும் அப்படித்தான்! மனிதனுக்குக் கால்கள் இரண்டு என்பதைப்போல நாம் குறிப்பிடுகிற திராவிட நாட்டு மக்களுக்கு பொதுவான கலையும், கலாச்சாரமும் உண்டு; அது வட நாட்டிலே வழங்கிவரும் கலை-கலாச்சாரத்தைவிட வெகுவாக முரண்பாடு கொண்டது என்பதும் மறைக்க முடியாத உண்மை.

(4) மொழி ஒற்றுமை.

நாங்கள் இனத்தால் திராவிடர்; மொழியால் திராவிடர்; கலையால், கலாச்சாரத்தால் திராவிடர்; வாழும் வாழ்க்கை முறையால் திராவிடர் என உலகறியச் சொல்லிடும் வேளையில்தான், 'நிறுத்து, தம்பி! உங்களுக்கு ஏது பொதுவான மொழி? நான்கிற்கும் மேற்பட்ட மொழிகளையல்லவோ நீங்கள் பேசுகிறீர்கள்?' எனக் கேட்கின்றனர், சிலர்!

ஆந்திர, கேரள கன்னட மொழிகளின் தாயே தமிழ் தான்—என பதில் கூறுவதற்கு முன்னுல்; இந்தி மொழிக்கும் திராவிட மொழிக்கும் உள்ள வேற்றுமைகளைவிட, நமது நான்கு மொழிகளுக்குள்ளே நிலவும் வேற்றுமை மிக மிகக் குறைந்தது என்பதைத்தான் சொல்லிக்காட்ட வேண்டியவர்களாயிருக்கிருேம். எனவே இதன் மூலமாவது நாம் பெரும்பான்மை இந்தி மொழி பேசும் வடநாட்டுக்காரர்களிடமிருந்து மாறுபட்டவர்கள் என்பது மீண்டும் கோடிட்டுக் காட்டப்படுகிறது.

(5) மத ஒற்றுமை.

அநேகமாக திராவிட நாட்டில் சுயமரியாதைக்காரர்களைத் தவிர மற்ற பெரும்பான்மையோரிடையே மதத்தைப் பொறுத்தவரையில் அதிக வேற்றுமைகள் இல்லை.

(6) பொருளாதாரப் பிணைப்புகள்.

இதுவும் முக்கியமானது.

ஆஸ்திரேலியாவில் முதலில் பல திறப்பட்ட வெள்ளை மக்கள் குடியேறியிருந்தார்கள். இதர இனத்தவரின்—முக்கியமாக மங்கோலியரின் குடியேற்றம் தடுக்கப்படாவிட்டால் ஆஸ்திரேலியாவின் பொருளாதார வளத்தை நல்ல முறையில் பங்கிட்டுக்கொள்ள முடியாது என்பதை உணர்ந்து, எல்லா வெள்ளை இனத்தவரும் சேர்ந்து குடியேற்றத் தடைச் சட்டம் இயற்றிக் கொண்டார்கள். இதனுல் அவர்களிடையே ஒற்றுமை வளர்ந்தது.

அதே போலவே தான் ஜப்பான் நாட்டிலும்! நாடு சிறியதாக இருப்பதால் சேர்ந்து இருந்தால் உண்டு வாழ்வு—என்ற நிலைமை ஏற்பட, 'நாமெல்லாம் ஒரு குடும்பம்' என்ற உணர்வு அவர்களிடைய மலர்விட்டது.

பொதுவான பொருளாதார பிணைப்பு இருந்தால்தான் ஒரு தேசிய இனம் உருவாகும் என்பதல்ல; பொதுவான பொருளாதார ஒற்றுமை இருந்தால் நிச்சயம் தேசிய இனங்களிடையே உள்ள ஒற்றுமை வலுவடையும்!

இதை வைத்து நோக்குவோமேயானுல், பாலாறு போன்ற பல பிரச்னைகள் நாம் குறிப்பிடுகிற திராவிட தேசிய இனத்தை மேலும் பலப்படுத்தும் தன்மை கொண்டவை.

(7) அன்னிய ஆதிக்கம்.

இதுதான் தற்காலத்தில் பல தேசிய இனங்களைத் தனித்து வாழத் தூண்டிய மாபெரும் சக்தியாகும்!

ஆங்கிலேயரின் ஆதிக்க உணர்ச்சி அதிகரித்தபோது தான் அயர்லந்திலே தேசிய உணர்ச்சி கொடி கட்டிப் பறந்தது. அதைப் போலவே வடநாட்டவரின் ஆதிக்க உணர்ச்சி அதிகமாக ஆக திராவிட தேசிய உணர்ச்சியும் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் வேளையொன்று வருமென்பதில் நமக்கு நம்பிக்கையுண்டு.

மத்திய அரசாங்கம் சுரண்டுகிறது என்பதை இப்போது தானே குமாரசாமி ராஜாக்களே உணர்ந்திருக்கின்றனர்! இதை தமிழரல்லாத இதர திராவிடர்களும் உணர்வதற்கு சிறிது நாட்கள் பிடிக்கத்தான் செய்யும்!

எனவே தான் இன்றில்லாவிட்டால் நாளை; நாளை இல்லாவிட்டால் நாளைமறுநாள் விழிப்புணர்ச்சி அகில திராவிடமெங்கும் மலரும்; தனியரசு துவங்கும் என்பதிலே அசையாத உறுதி வைத்திருக்கிருேம், நாம்!

—மாறன், எம். ஏ.

## திராவிட நாடு விடுதலை (பிரிவினை) வாரம் கொண்டாடுவீர்!

★

திராவிட முன்னேற்றக் கழகத்தின் துவக்க நாளான 17—9—56-ஆம் நாளிலிருந்து 23—9—56-ஆம் நாள்வரை

திராவிடநாடு விடுதலை (பிரிவினை) வாரமாகக்

கொண்டாடும்படி ஆங்காங்குள்ள தி. மு. கழகக் கிளைகளையும், கழகச் சார்புள்ள அமைப்புகளையும் அன்போடு விரும்பிக் கேட்டுக்கொள்கிறேன்.

பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள், இலவச நாடக அரங்குகள் ஆகியவற்றைச் சிறப்போடும் பொலிவோடும் நடத்திக் கருத்து விளக்கம் செய்யுமாறு மகிழ்ச்சியோடு கேட்டுக்கொள்கிறேன்.

'அறிவகம்'
சென்னை—13.
1—9—56

**இரா. நெடுஞ்செழியன்,**
பொதுச்செயலாளர், தி. மு. கழகம்



# உதய சூரியன்

[ முதல் பக்கத் தொடர்ச்சி ]

கெடாதுங்கிறியே; அது அந்தக் காலம்!......இப்ப, அணுகுண்டு சோதனையை தொடர்ந்து கொஞ்ச காலத்திற்கு நடத்தினு—கடல்—கொதிக்கிற மீன் குழம்பாக மாறிவிடும்! காங்கிரஸ் கடலிலேயும் சமயோஜிதம் பிள்ளைகள், பலவேஷம் பிள்ளைகள் போன்ற அணுகுண்டு சோதனைகள் நடை பெற்றுக்கொண்டே யிருக்குமானுல், அந்தக் கடலிலே யுள்ள ஆகஸ்டு தியாகிகள் என்ற மீன்கள் செத்து மடிந்து, கடலே ரத்தக் குழம்பாகிவிடும்!

பலவே: எப்பா!.........கர்ணகடூரமா பேசுறியே........ கறுப்பா!......நீயும் கதர் போட்டிருக்கே!...

கறுப்: கதர்மாத்திரமா? கறுப்பு கூட போடுவேன்!

பலவே: சட்டையா?

கறுப்: இல்லை ... பட்டை...... ஏன் தெரியுமா? கவலையை மறப்பதற்காக!... இந்தக் கறுப்பனை சாதாரணமாக நினைக்காதே பலவேஷம்! ஆரம்பத்தில் கள்ளுக்கடை மறியல் செய்த தொண்டர்களுக்கு நான் தலைவனு யிருந்தேன்; இன்று குடிகாரனுகி விட்டேன்; தெருவிலே உருளும் வெறியனுகி விட்டேன். காங்கிரஸ் கொடியும் கையுமாக இருந்தேன் ஒரு காலம்; இப்போது கள்ளுப் புட்டியும் கையுமாக இருக்கிறேன். வந்தே மாதரம் என்று கத்திக் கத்தி வலியெடுத்த வாயடா இது! தந்திக்கம்பி, தண்டவாளம் அறுத்த கரம்!.....வேப்பம்பட்டை வேலம்பட்டை வெட்டிக் கொண்டிருக்கிறது!........ ஏன்?.... எதற்காக?...... வேதனை! வேதனை!! தாங்க முடியாத வேதனை!!! உன்னைப் போன்ற விழலுக்கு நீர் இறைத்தோமே என்ற வேதனை!!! அந்த வேதனையை மறைக்க, வயிற்றுக்கில்லாத கொடுமையை மறக்க, தெய்வம் காட்டிய வழி இதுதான்!.......நான் தேர்ந்தெடுக்கக் கூடிய மார்க்கம் இது ஒன்று தான்!........."ஓர்ரிசை"த் தீர்த்துக்கொள்ளுவதாகச் சொல்லி, ஒயின், பிராந்தி, விஸ்கி அருந்தும் பெரிய மனுஷன் அல்லடா நான்! உண்மையிலேயே பசியை மறக்க, பாடுபட்டதற்குப் பலன் கிடைக்காத பாதகத்தை மறக்க, இந்தப் பாரத மாதாவின் புத்திரன் வகுத்துக் கொண்ட பாதையடா இது!

பலவே: கறுப்பா!...உன் கஷ்டம், கவலை யெல்லாம் எனக்குத் தெரிகிறது!... உன் கவலைகள் நீங்கத் தான் உன்னை நான் கூப்பிடுகிறேன். வேளா வேளைக்கு நல்ல சாப்பாடு!...வேணுங்கிற அளவுக்கு செலவுக்குப் பணம்! எல்லாங் கிடைக்கும் என்னேடு வந்தால்!

இப்ப பேசினே பாரு; இதே மாதிரி மெட்டிலே எதிர்க் கட்சிகளைத் திட்டிப் பேசி, எங்க முதலாளிக்கு வோட்டுக் கேட்டால் போதும்! அருமையான பேச்சுத் திறமை யிருக்கிறது உன்னிடம்! அதைக் காங்கிரசை அழிக்கப் பயன்படுத்தாதே!...

கறுப்: நான் ஏன் காங்கிரசை அழிக்கிறேன்? காங்கிரஸ் மாளிகை இந்தக் கரத்தாலும் கட்டப் பட்டது தான்!...அதை நான் அழிக்க நினைப்பேனு? உங்களைப் போன்ற வெளவால்கள் மாளிகையில் அடையக் கூடாது என்கிறேன். அவ்வளவு தான்!

பலவே: சரிதான்,சும்மா இரு! வெளவால்கள் இல்லேன்னு...இப்ப, காங்கிரசு வாழ முடியாது! எங்களுக்குக் காங்கிரசு ஆதாரம். காங்கிரசுக்கு நாங்கள் ஆதாரம்!......

கறுப்: உங்க ரெண்டு பேருக்கும் இந்திய மக்கள்...கபளீகாரம்!...போய்யா...... அடுத்த ஜென்மம்னு ஒண்ணு இருந்தா நீங்கள் எல்லாம் பச்சோந்தியாத் தான் பிறப்பீங்க!......

பலவே: நீ என்ன வேணுமானுலும் திட்டு!....குட்டு!...... எனக்குக் கவலையில்லை... காரியம் ஆனு சரி! நான் உன்னுட்டம் ஒரு ஏழை!

கறுப்: ஆனு என்னை விட கொஞ்சம் புத்திசாலி...... மரத்துக்குத் தகுந்தபடி நிறத்தை மாத்திக்கிறீல்ல!

பலவே: அதாம்ப்பா பிழைக்கும் வழி!...உன்னுட்டம் கொள்கை கொள்கைன்னு உறுதியா இருந்தா, அப்பறம் கவலையைமாத்துறத்துக்கு குடிச்சுட்டு சாக வேண்டியதுதான்!

கறுப்: சரி; இப்ப நீ என்னு சொல்றே?

பலவே: சமயோஜிதம் பிள்ளை வீட்டுக்கு நீ வரவேண்டு மென்கிறேன். இன்னைக்கே உன்னை அவசரமாப்பாத்து பேசணும்னு சொன்னுர். அழைச்சிகிட்டு வரச் சொன்னுர். நாளைக்கு அவருக்கு வேலை ஒழியாது! அவர் பெண்ணு கல்யாணத்துக்கு நிச்சயதார்த்தம் செய்ய நாள், வேளை, லக்னம், முகூர்த்த மெல்லாம் பார்க்கணுமாம்!

கறுப்: ஓகோ, அவருக்குப் பெண் ஒண்ணு இருக்கா?

பலவே: ஆமாம்! அதுவும் உன்னுட்டம்தான் பெரிய வாயாடி!

கறுப்: போலிப் பாஞ்சாலி அல்லவே!......

பலவே: வாயாடி......போலிப் பாஞ்சாலி!...(சிரித்தபடி) என்னுப்பா, ஒரே சினிமாவா கலந்து கலந்து பேசுறே?...

கறுப்: ஏன் உனக்கு சினிமா பிடிக்காதா? கண்ணு நல்லாத்தானே இருக்கு?...

பலவே: அதெல்லாம் சரியாத் தான் இருக்கு!...கண்ணாடி கூட போட்டிருக்கேனே ...கண்ணு, காது எல்லாம் நல்லாத்தான் இருக்கு...... முதுகுதான்...

கறுப்: கொஞ்சம் வளைஞ்சு போயிருக்கு!...உன் மாதிரி ஆளுக்கெல்லாம் முதுகு வளையிறது ஆச்சரியமில்லை!...கூழைக் கும்பிடு போட்டுப் போட்டு கூனிப் போய்டும் பாவம்!...

பலவே: பாத்தியா...சும்மா என்னையே 'சத்தாய்'க்கிறியே! வாப்பா போகலாம் முதலாளிகிட்ட!

கறுப்: வர்றேன், ஆமாம்,எப்ப கல்யாணம்?...

பலவே: எனக்கா?...

கறுப்: உனக்கும் எனக்கும் யார் பெண்ணு கொடுக்கிறு? நீ கூனன், நான் குடிகாரன்! உங்க முதலாளி பெண்ணுக்கு எப்ப கல்யாணம்னு கேக்கிறேன்!

பலவே: இந்த மாசத்திலேயே நாள் வச்சிடுவாங்க...... எலக்ஷனுக்கு முந்தி கல்யாணம் நடந்தாகணும்!...

கறுப்: ஏன் அவ்வளவு அவசரம்?...

பலவே: அதெல்லாம் பெரிய ரகசியம்!...கூடிய சீக்கிரம் கல்யாணம் ஆகித் தீரணும்!

கறுப்: ஏன் ஏதாவது......
"ஓராமாதம் உடலது தளர்ந்து...
ஈராமாதம் இடையது கனத்து...
மூன்றுமாதம்......"

(என்று பாடத் துவங்குகிறுன் கறுப்பன்)

பலவே: அடேடே....சேசே! அதெல்லாம் இல்லப்பா!... தங்கமான பெண்ணு!... அப்படியெல்லாம் சொல்லாதே; வாய் அழுகிப் போய்டும்!

கறுப்: வாய் என்ன; வாழைப் பழமா, மாம்பழமா—அழுகிப் போக?

வாய் அழுகிறதா இருந்தா, நேத்தி ஒண்ணு பேசிட்டு, இன்னைக்கு ஒண்ணு பேசுகிறுனே; அவனுக்கெல்லாம் வாய் வயிறு எல்லாம் அழுகி புழு பூச்சி நெளியணுமே!..

பலவே: சரி.......சரி......வா போவோம்......

கறுப்: வருகிறேன்........உன் முதலாளியும் என்னதான் சொல்றுர்........ஏன்தான் கூப்பிட்டார்னு பாத்துடறேனே!...ம் ... போ போ போ!!! வலிமையற்ற தோளினுய் போ போ போ! கிலிபிடித்த நெஞ்சினுய் போ போ போ! கீழ்மையென்றும் வேண்டுவாய் போ போ போ!

[போகிறுர்கள்—திரை சுருங்குகிறது]

(தொடரும்)

தலைமை நிலையச் செய்தி!

## மத்திய செயற் குழு

9—9—56 ஞாயிறு பிற்பகல் 3-மணிக்கு, சென்னை—இராயபுரம் 'அறிவக'த்தில், தி. மு. கழக மத்திய செயற்குழுக் கூட்டம் நடைபெறும்.

## தி. மு. க. வும் தேர்தலும்!

❀ 4-ம் பக்கத் தொடர்ச்சி

பணக்காரர்கள் அல்லவே! 20 ஆயிரம், 30 ஆயிரம் செலவு செய்து அங்கத்தினர்களாக வந்தவர்கள் அல்லவே! ஒரு சிலர் விதி விலக்காக இருக்கலாம். பெரும்பாலோர் சாதாரணமானவர்கள் என்பது வெளிப்படையாக தெரிந்த விஷயம்.

காங்கிரஸினுல் தேசம் விடுதலை அடைந்தது என்பதை உணர்ந்த மக்கள், காங்கிரஸ் கட்சியின் பேரைச் சொல்லிக் கொண்டு தேர்தலில் போட்டியிட்டவர்களுக்கு வோட்டளித்தார்கள். அது எதைக் காட்டிற்று? காங்கிரஸ் செய்த சேவையை மக்கள் போற்றுகின்றனர் என்பதைத் தவிர வேறல்ல.

அதைப் போலவே அடுத்த பொதுத் தேர்தலில் தனி திராவிட நாடு பிரச்னையின் மீது தி. மு. க. போட்டியிடுமானுல், காமராசர் கூறுவது போல அப் பிரச்னைக்கு மக்களிடம் எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்பது ஓரளவு தெரிந்து கொள்ள முடியும்.

மக்களிடையே அந்த லட்சியத்திற்கு ஆதரவிருந்து, செல்வாக்கு இருந்தும் பணமில்லாத காரணத்தால் தி மு. க. அபேட்சகர்கள் தோல்வியடைவர்களானுல், பெரும் பணத்தை செலவிடுவதன் மூலம் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் வெற்றி பெறுவார்களானுல், லட்சியத்தைவிட காசைப் பெரிதென மதிக்கும் அளவுக்கு மக்களின் நிலை காங்கிரஸின் 8 வருட ஆட்சியில் தாழ்ந்துவிட்டதென்பதை நாம் அறிந்து கொள்ளமுடியும்.

இந்த உண்மைகளையெல்லாம் அறிந்துகொள்ள வேண்டுமானுல் தி. மு. க. தேர்தலில் குதிப்பதென்று செய்துள்ள முடிவை வரவேற்க வேண்டுமேயன்றி எதிர்க்க வேண்டியதில்லை.

ஒரு உயரிய லட்சியம் சாவதும் பிழைப்பதும் ஒரு கட்சி தேர்தலில் அடையும் வெற்றி தோல்வியைப் பொறுத்தாயிருக்குமாயின் அந்த லட்சியத்தை லட்சியம் என்று கொள்ளாதிருப்பதே மேலாகும். இன்று கன்சர்வேடிவ் கட்சியார் அதிகாரத்திலிருக்கின்றனர் என்பதால் தொழிற் கட்சியோ, அதன் லட்சியங்களோ செத்துவிட்டன என்று யார் சொல்ல முடியும்?

[சிங்கை 'தமிழ் முரசி'ல் திரு ரெ. சீனிவாசன் எழுதிய கட்டுரையின் ஒரு பகுதி]

❀

## மக்கள் நலம் பேணும் மகிமையே மகிமை!

பச்சை மரங்களை படபடவென வெட்டிச் சாய்ப்பது போல, சென்ற கிழமை ஐதராபாத் அருகே நடை பெற்ற கோர ரயில் விபத்து, 121 பேர்களை விழுங்கி விட்டது—என்ற பயங்கரச் செய்தி கேட்டு பதை பதைத்தோம்; விழிகள் பிதுங்க வேதனையின் வயப்பட்டோம்! ஆனுல் அதனினும் மேலாய் இப்போது தடுமாறுகிறேம், அந்தக் குலைவுக்குக் காரணம், ரயில்வே அதிகாரிகளின் அலட்சியப் போக்குதான் என்கிற நெஞ்சுறுக்கும் செய்தி கேட்டு!...

"விபத்து நிகழ்வதற்குச் சரியாக 21 மணி நேரத்திற்கு முன்னுல், மெகபூப் நகர் ரயில்வேத் தொழிலாளர்சங்கத் தலைவர் மெகபூப் நகர் இரயில்வே நிலைய அதிகாரியிடம் (ஸ்டேஷன் மாஸ்டர்), துரோணசலம்—செகந்தராபாத் பாதையில் இரயில் விடுவதில் உள்ள ஆபத்து குறித்து எச்சரித்தார்; இரயில் போகக் கூடாதென அவர், இரயிலில் உள்ள அபாய அறிவிப்பு சங்கிலியை இழுத்தும் எச்சரிக்கை தந்தார்; இவற்றையெல்லாம் பொருட்படுத்தாமலும், பெய்து கொண்டிருந்த பெருமழை குறித்துக் கவலை கொள்ளாமலும் அலட்சியமாக இருந்ததின் விளைவே விபத்திற்குக் காரணம்,"

—மக்கள் சபை உறுப்பினர் இருவரும், ஐதராபாத் எதிர்க் கட்சித் தலைவரும் கையொப்பமிட்டு வெளியிட்டிருக்கும் கூட்டறிக்கை ஒன்று இந்தபயங்கர உண்மையை வெளிப்படுத்துகிறது!

"இப்போது ரயில் கவிழ்ந்த பாலம், கடந்த ஆகஸ்ட் முதல் தேதியன்று "போசன் குந்தா" என்ற ஏரி உடைப்பெடுத்ததின் காரணமாக பழுதடைந்தது. அதிகாரிகள் பழுதுபார்த்தனர். ஆனுல் பாலம் சரிவர முழுவதும் பழுதுபார்க்கப்பட வில்லை. அதற்குள் ரயில் செல்ல அனுமதித்ததுவே விபத்தின் மூல காரணம்."

—என்று அவர்கள் குற்றம் சாட்டுகின்றனர்.

"ஆபத்து. என்று தடுத்தும் அலட்சியப்படுத்தினர்." அதன் விளைவு? ஒன்றல்ல, இரண்டல்ல; நூற்றி இருபத்தோரு பிணங்கள்! பாருங்கள்,' எங்கள் பாரதத்தின் மகிமையை! என்று பறைசாற்ற பலியாகி விட்டது! ஐயகோ! அநியாயம்! அடுக்குமா இந்த நிலை?—இப்படிக் கொதித்துக் குமுறி விஞ எழுப்பும் கோடானு கோடி மனிதாபிமானம் குன்ருத நல்ல உள்ளங்களுக்கு என்ன விடை கிடைக்கப் போகிறது?

நாடாளும் நாசகாரர்கள் நச்சுப் பாம்பினும் கொடியோர்! அவர்கள் மக்கள் நலம்பேணும் மகிமை இதுதான்!—என்று தான் முடிவெடுக்க நேருகிறது! விந்தை! விபரீதம்!

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

### தேர்தல் நிதி சிறப்புக் கூட்டம்

8-9-56 சனி மாலை 6 மணி-கோகலே மண்டபம்

தலைவர்:

**கே. ஏ. மதியழகன்**

பொதுச்செயலாளர்.

**இரா நெடுஞ்செழியன் அவர்கள்**

'இலக்கிய இன்பம்' என்னும் பொருள்பற்றி பேசுவார்.

நன்கொடை: ரூ 1, அணு 8, 4.

--தலைமைக் கழகம். (தி. மு. க.)

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★



## கொள்கை வளருது கோபுரம் போலே!

### பஞ்சம்பட்டி

18—9—56 செவ்வாய் மாலை 5 மணிக்கு பஞ்சாயத்து போர்ட் சார்பாக இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராஜேந்திரன் அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்படும்.

### கும்மம்பட்டி

8—9—56 சனி மாலை 4 மணிக்கு, மதுரை மாவட்ட தி. மு. க. செயலாளர் தோழர் எஸ். முத்து அவர்களுக்கு வரவேற்பும், தேநீர் விருந்தும் நடைபெறும். தோழர்கள் பி. சமதர்மம், வி. ஆர். மூர்த்தி, கு. பழனிச்சாமி—ஆகியோர் பேசுவார்கள்.

### மதுரை

9—9—56 ஞாயிறு மாலை 6 மணிக்கு மதுரை முத்து படிப்பகம் நான்காவது ஆண்டு நிறைவு விழா நடைபெறும். தோழர் என். ஜீவரத்தினம் அவர்கள் வார்கள்.

### சென்னை [27-வது வட்டம்]

10—9—56 திங்கள் மாலை 6 மணிக்கு, அறிவியக்க மன்றத்தின் ஆண்டு விழா பொதுக்கூட்டத்தில் தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் பேசுவார்கள்.

### செங்குன்றம் (சென்னை)

10—9—56 ஞாயிறு மாலை 6 மணிக்கு, கிராண்ட் லயனில், வ. உ. சி. மன்ற நான்காம் ஆண்டு விழா, தோழர் டி. சன்முகம் எம். எல். ஏ. அவர்கள் தலைமையில் நடைபெறும். அறிஞர் அண்ணு, டாக்டர் சத்தியவாணி முத்து—ஆகியோர் பேசுவர்





## பிறைவானம்

### பிள்ளைகள் பகுதி

## ★ பெருந்தன்மை ★

"அன்புள்ள ஐயாவே, அடியேனைச் சற்றுப் பாருங்கள். நீங்கள் பெரும் பணக்காரராமே! நல்ல இருதயம் கொண்டவராமே, கடவுளர்கள்பால்! தீப நைவேத்தியங்களுக்கும், கும்பாபிஷேகங்களுக்கும் கொட்டிக் குவிப்பீர்களாமே, பணத்தை! உங்கள் பெருந்தன்மை வாழட்டும்! மந்திரிகள் எல்லாம் உங்களுக்கு ரொம்பவும் வேண்டியவர்களாம்—போலீஸ் அதிகாரிகள் கூட்டம் உங்களிடம் பெட்டிப் பாம்பாம்—எனக்கென்ன தெரியும்? ஊரிலே பேசிக் கொள்ளுகிறுர்கள் அப்படி! ஆகவேதான் உங்களிடம் வந்தேன்! இந்த ஏழையைச் சிறிது ஏறிட்டுப் பாருங்கள்! அழுக்கடைந்த உடை, என்னை அனுதை என்று சொல்லவில்லையா? வற்றிப்போன உடல், மூன்று நாள் முழுப் பட்டினி என்ற உண்மையைச் சொல்லவில்லையா? ஆகவே, ஐயாவே, கொஞ்சம் கஞ்சி ஊற்றுங்கள்!"—என்று கெஞ்சினுல்—தஞ்சம் என்று கதறினுல்—இளகவாப் போகிறது இந்த மாளிகை வாசியின் மனம்! வேறு என்ன தான் வழி?...ம்...அப்படிச் செய்யலாமா? ......... தப்பாயிற்றே!......பின் எப்படித் தான் பசி திரும்?......சரி, சரி!......"

'வருக, வருக!' என்று வர்ண ஜால மின்சார விளக்குகள் வரவேற்க — சாரை சாரையாக பள பளக்கும் மோட்டார்கள் அணிவகுத்துச் செல்ல— அந்த மூன்றடுக்கு மாடி வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஏழைச் சிறுவன் இப்படி யோசித்துக் கொண்டிருந் தான்!

அந்த வீடு புதிய மாளிகை! அப்போதுதான் கட்டி முடித்திருந்தார். அன்றைய தினம் புது மனை புகு நாள்—அதாவது 'கிரகப் பிரவேசம்' என்று அழைப்பிதழில் கண்டிருந்தது! பணக்காரராயிற்றே, நகரெங்கும் சிதறிக் கிடக்கும் மாளிகை வாசிகள் மாலையில் நடைபெற இருந்த மகத்தான விருந்துக்குக் கூடி விட்டனர். அப்போதுதான் ஆபத்தில் சிக்கி விட்ட 'ராஜா'வை மீட்க 'சதுரங்க ஆட்டக்காரர்' சிந்திப்பாரே, அது போல 'பாழும் பசி தீர வழி என்ன?' என்ற யோசனையில் மூழ்கிக் கிடந்தான் அந்தப் பையன். வழி யொன்றும் கண்டான்.

* * *

வரிசை வரிசையாக போடப்பட்டிருந்தன மேஜைகள்— மேலே பலவித உணவுகள்— இனிப்பும், காரமும் கலந்த உயர்ந்த ரகத்தவை! இருக்காதா? தஞ்சை மாவட்டத்தி விருந்தல்லவா பிரத்தியேகமான சமையல்காரர்களை அழைத்து வந்திருந்தார், மாளிகைக்காரர்!

வரிசையாக அமர்ந்திருந்த பெரிய மனிதர்களுக்கு மத்தியில் நமது சிறுவனும் காணப்பட்டான். எப்படியோ இடம் பிடித்து விட்ட அவனது பஞ்சடைந்த கண்களில் இப்போது தனி மகிழ்ச்சி! 'சீக்கிரம்; சீக்கிரம்!' என்று துரிதப்படுத்திக் கொண்டிருந்தது 'காலி வயிறு'! அவன் தயாராஞன்.

ஆனுல், அவனது கைகள் பலகாரத் தட்டுகளில் பாய்வதற்குள், முரட்டுக் கரம் ஒன்று பின்னுலிருந்து அவன் கழுத்தில் பதிந்தது!

அவன் திரும்பினுன். "அயோக்கியப் பயலே! இதென்ன சத்திரமாடா? இந்த கோடீஸ்வரர்களுக்கு மத்தியிலே— குப்பை மேட்டு நாயே, எப்படிடா உட்கார்ந்தே? விருந்து கேட்குதோ விருந்து! யார்டா நீ கழுதை...?" என்ற முரட்டுக் குரலோடு கழுத்தைப் பிடித்து வெளியே இழுத்தார் ஒருவர். அவர்தான் மாளிகைக்காரர்! தான் செலவு செய்யும் ஒவ்வொரு 'நயா பைசா'வும்— மன்னிக்க; 'வெறும் பைசா'வும் வீணுகக்கூடாதென்று அவரது எண்ணமாயிற்றே! அனுமதிப்பாரா அவனே!

பேந்தப்பேந்த விழித்த அவனை "யாருடா நீ? போலீசிலே புடுச்சிக் கொடுத்துடுவேன்!... சொல்லி விடு" என்று மிரட்டினுர் மறுபடியும்!

"நானு...புதுசாக கலெக்டர் ஐயா வந்திருக்காரே, அவரோட வேலைக்காரன்! அவரோடதான் வந்தேன்!" என்ருன் அவன். உணவும் வேண்டாம், மண்ணும் வேண்டாம்; எப்படியாவது பிடி நழுவினுல் போதும்; 'தப்பித்தோம்—பிழைத்தோம்' என்று ஓடியே விடலாம் என்று அவன் நினைத்தான். ஆகவே இப்படி ஒரு அபாண்டத்தைச் சொன்னுன்.

ஆனுலும், லேசுப்பட்டவரா வீட்டுக்காரர்? அவன் சொல்வது பொய் என்றே நம்பினுர். "சரி,வா! கலெக்டரையே கேட்டுடறேன்!" என்று பரபரவென்று இழுத்தார் அவனே!

தலையிலே பேரிடி விழுந்ததைப் போன்ற நிலையை அடைந்தான் அவன்!

* * *

"மிஸ்டர்! கொஞ்சம் பாருங்கள்! இந்தப் பையன் உங்கள் வேலைக்காரன்தானு என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று ஆங்கிலத்தில் எழுந்த குரல் கேட்டு மெதுவாகத் திரும்பினுர், சலவை கலையாத உடை அணிந்து கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த கலெக்டர்!

பையன் 'தொலைந்தோம், இன்று!' என்று முடிவு கட்டி விட்டான்!

கலெக்டர் அவனை ஏற இறங்கப் பார்த்தார். அவனது நீர் படர்ந்த ஏக்கக் கண்கள் "கருணை உள்ளவரே! காப்பாற்ற மாட்டீர்களா, என்னை?" என்று கெஞ்சுவதைப்போல இருந்தது!

"ஆமாம் மிஸ்டர்! இவன் பொய் சொல்லவில்லை! என் வேலைக்காரன்தான்! நான் தான் அழைத்து வந்தேன்!"

பூமி நழுவி தான் அதள பாதாளத்தை நோக்கி உருண்டு கொண்டிருப்பதாக உணர்ந்தான் சிறுவன். இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியாத அவன் அந்த மாளிகைக்காரரின் மேலேயே சாய்ந்து விட்டான்!

மறுபடி அவன் பழைய இடத்திற்கே அழைத்துச் செல்லப்பட்டதும், "ஏன் தம்பி, கொஞ்சம் 'நீட்டா டிரஸ்' பண்ணிக்கப் படாதோ?" என்று விருந்து கொடுப்பவர் கேட்டதும், வயிறு நிரம்ப விதவிதமான உணவுகளை வாழ்விலே முதல் முறையாகச் சாப்பிட்டதும், அவனுக்குக் கனவு போலவே இருந்தது! அவன் கண் முன்னே அந்த காருண்யமுள்ள கலெக்டரின் அன்பொழுகும் முகம், தோன்றித் தோன்றிச் சித்திரவதை செய்து கொண்டிருந்தது!

* * *

அளவுக்கு மீறிய உணவாயிற்றே; களைப்பு மேலிட்டு விட்டது அவனுக்கு! படுத்துறங்க நல்லதோர் இடம் தேடி கடற்கரையோரத்தில் உலவிக் கொண்டிருந்த அந்தச் சிறுவன், எதையோ கண்டு திகைத்தான்.

அங்கே கலெக்டர் நின்று கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் அவன் ஏன் அப்படி ஓட வேண்டும்?

"ஐயா! கலெக்டர் ஐயா! என்னை மன்னிச்சிடுங்க! நான் பெரிய தப்பு செஞ்சேன்— அதுக்கு பெரிய தண்டனை நீங்க சமயத்திலே என்னைக் காப்பாத்திவிட்டதுதான்!........." என்று புலம்பினுன். அவர் காலடியில் விழுந்தான்.

அவர் சிரித்தார்!

"அடடே! எழுந்திருப்பா! எனக்கிட்ட ஒரு செட் 'பேண்ட், கோட்' இருந்தது; நான் கலெக்டராசாப்பிட்டேன்; உன்னிடம் இல்லை; நீ என் வேலைக்காரனு சாப்பிட்டே! நீயும் 'நானும் ஒண்ணேதான்! கலெக்டர் ஊரிலேயே இல்லேங்கறது அந்த மாளிகைக்காரனுக்கு தெரியாதது நம்பரெண்டு பேருக்கும் நல்லதா போச்சு!"

—சிறுவன் "ஆ" என்று திகைத்தபடி எழுந்தான். அந்த புதுரக பிச்சைக்காரன் எங்கேயோ போய்க்கொண்டிருந்தான்.

—சொர்ணம்

### "ஒற்றைக் கண்ணன்!"

அவர் ஒரு புத்தக வியாபாரி! ஆங்கில நாட்டின் இலக்கிய மன்னர்கள் தோன்றிய பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பகுதிக் காலமது: இலக்கிய ரசிகர்கள் மிக மிகக் குறைவு; ஆகவே அவர் பரம ஏழை!

அந்த ஏழைத் தந்தைக்கு ஒரு மகன் பிறந்தான்; எனினும் நிறைந்த இன்பம் கிடைக்கவில்லை அவருக்கு. ஏன் தெரியுமா? தீராத நோயொன்றில் சிக்கிவிட்டான் அக் குழந்தை. வெல்லச் சொல் மழலைக்குப் பதில் உள்ளமுருக்கும் வேதனைக் குரல் எழுப்புவான் அவன்; தந்தை தவித்தார்.

பக்கத்திலிருந்தவர்கள் வழி ஒன்று சொன்னுர்கள். 'வியாதியுடைய குழந்தைகளை நாட்டின் மன்னர் தொட்டு விட்டால் நோய் பறக்கும்; சேய் பிழைக்கும்'—என்றுர்கள். இப்படி ஒரு மூட நம்பிக்கை அக் காலத்தில் பரவி இருந்தது. மன்னர்கள் மக்களினும் மேம்பட்டவர்கள்: மகத்தான சக்தி படைத்தவர்கள்; 'மகேச'னின் வாரிசுகள்—என்ற நம்பிக்கையின் பின்னுல் எழுந்தவைதான் அப்படிப்பட்ட மூட எண்ணங்கள்.

தந்தையும் அதுதான் வழி என்று நம்பினுர். குழந்தையைத் தூக்கிக்கொண்டு லண்டன் நகர் ஓடினுர். அப்போது அரியணையிலிருந்த ராணியை சந்தித்தார். நோய் வாய்பட்ட தன் சிசுவைத் தொட்டு, நோயை விரட்ட வேண்டுமென்று கெஞ்சினுர்.

ராணியார் தொட்டார்!

நோய் ஓடிற்ரு?.........இல்லை; நோயின் தாக்குதலால் அந்தச் சேயின் கண் ஒன்று பழுதாகி விட்டது! கண்ணிழந்த அந்தக் குழந்தையின் முகம் விகார உருக்கொண்டு விட்டது! தந்தை 'ஓ' வென்று புலம்பினுர். ஆனுல். அவருக்கு அப்போது எப்படித் தெரியும், அந்த ஒற்றைக் கண்ணன்தான், 'ஆங்கில இலக்கியத்தின் தந்தை' என்ற ஒப்பற்ற பட்டத்தைப் பெறப் போகிருன் என்பது!

குழந்தைப் பருவத்தில் இப்படி ஒரு சீர் குலைவுக்கு இலக்கானவன்தான் இலக்கிய மேதை டாக்டர் ஜான்சன்!

ஆர். சாமாசாண்டியன்; சென்னை.

(?) உண்ணுவிரதம் என்பது என்ன?

சாதாரண பிரஜை பொருவன் மேற்கொண்டால் தற்கொலைக் குற்றமாகவும், பம்பாய் பிரதமர் மேற்கொண்டால் உன்னத வேளவியாகவும் கருதப்படுகிற ஒரு அரசியல் 'அர்த்தநாரீஸ்வரச்' செயல்!

(?) உலகம் எப்போது அழியும்?

நல்ல கேள்வி தோழரே, இது! எதிர்க் கட்சிகள் எப்போது அழியுமென்று எதிர்பார்க்கும் காமராசரைப் போலிருக்கிறீரே!

சு. தே. சி. மணி; யானைபாளையம்

(?) தமிழ் நாட்டில் குப்பை தொட்டிகளில்கூட பல குடும்பங்கள் வாழ்கின்றனவே: அதைப் போல வடநாட்டிலும் வாழ்கின்றனரா?

வடநாட்டிலும் தமிழன் சோல் சுரண்டி, தெருவோரத்தை வீடாக்கிக் கொண்டு வாழ்கிறான்! ஆனால் சென்னாட்டில் எந்த வடநாட்டானும் அப்படி வாழ்வதில்லை — எனபது மட்டும் நிச்சயம்!

வளையாபதி; புலியூர்.

(?) மந்திரிக்கழகு வரும்பொருள் உரைப்பதா?

இல்லை; வரும்போருள் கரைப்பது!

(?) நாக்கிலே நரம்பில்லாதவர்கள் எப்படியிருப்பார்கள்?

அவர்கள் ஒரு நாட்டின் பிரதம மந்திரிகளாகக்கூட இருப்பார்கள்!

கோ. கற்பகம்; காளாப்பூர்.

(?) பண்டித நேருவின் நா அசைந்தால் நாடசையும் என்பது உண்மையா?

ஆமாம்; 'நான்சென்ஸ்' என்று தகாத வழியில் பண்டிதரின் நா அசைப; அதனால் தென்னகமே அசைந்ததை அதற்குள்ளாகவா மறந்துவிட்டீர்?

வரதன்; பாண்டிச்சேரி

(?) திராவிட நாடு பிரிய வேண்டுமென்கிறீர்களே, பாதுகாப்புக்கு என்ன செய்வீர்கள்?

ஒழுங்கான பாதுகாப்புக்காகத் தானே, திராவிட நாடு கேட்கிறோம்.

(?) ஜாதிப் பெயர்களை ஒழிக்க வேண்டுமென்று தமிழகத்தில் முதன் முதலில் எப்போது தீர்மானிக்கப்பட்டது?

1929-ம் ஆண்டு, செங்கல்பட்டில் நடைபெற்ற முதலாவது மாகாண சுயமரியாதை மாநாட்டின் ஒன்பதாவது தீர்மானம் அது!

சே. பரந்தாமன்; நகரி.

(?) காந்தியார் தன்னைப் பற்றிக் காலட்சேபம் செய்வதை 'மேல் உலகத்'திலிருந்து கேட்டால் என்ன செய்வார்?

தன் பெயரை 'காலட்சேபத்'திற்கு பயன்படுத்துகிறார்களே என்று ஒரு பக்கம் வருத்தமும், நல்ல வேளை தன்னைப் பற்றி இன்னும் புராணம் எழுதாமல் இருக்கிறார்களே என்று மகிழ்ச்சியும் கொள்வார்!

சி. எஸ். கே., கோலார்.

(?) கனவுகள் பலிப்பதுண்டா?

ஏன் இல்லை? ஜின்னாவும் அவரைச் சேர்ந்த எட்டு கோடி முஸ்லீம் தோழர்களும் கண்ட 'கனவு'தானே, இன்று பிறைக் கொடியோடு பாகிஸ்தானாகத் திகழ்கிறது!

மூர்த்தி; ஜயங்கொண்டான்.

(?) இராமன் காடேகியபோது அயோத்தியாபுரி விதவையைப் போலவா காட்சி தந்தது? எப்படி?

ஏன் காட்சி தந்திருக்க முடியாது? இராமன் காடேகிய பின்னர் தசரதனும் செத்திருக்கிறான். அவனது சாவுக்குப் பிறகு அவனுடைய அறுபதினாயிரம் மனைவியரும் தாலியறுத்திருக்க வேண்டும். அறுபதினாயிரம் கைம் பெண்களுடன் அயோத்யாபுரி விதவையைப் போல காட்சி தராமல் சுமங்கிலி போலவா காட்சி தரும்?





# 'மணி மகுடம்'

## நூறுவது நாடக விழா

## அழைப்பிதழ்

அன்புடையீர்,

வணக்கம். வண்ணையம்பதி, தியாகராயர் கல்லூரி கலா மண்டபத்தில், 9—9—56 ஞாயிறு மாலை 6 மணிக்கு தியாகராயர் நுண்கலை மன்றம் சார்பில் நாங்கள் நடிக்கும் கலைஞர் கருணாநிதி தீட்டிய 'மணிமகுடம்' நூறாவது நாடக விழா நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடைபெற இருக்கிறது. தாங்கள் தவறாது வருகை தந்து விழாவைச் சிறப்பிக்க வேண்டுகிறோம்.

டாக்டர் மு. வரதராசனார் எம். ஏ., எம். ஓ. எல்., கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் கல்லூரி முதல்வர் ம. கி. ஷண்முகம் எம். ஏ., எல். டி., பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை எம். ஏ. எல். டி. 'பிரசண்ட விகடன்' ஆசிரியர் திரு நாரணதுரைக்கண்ணன் ஆகியோர் கருத்துரை வழங்குவார்கள்: மு. கருணாநிதியும் கலந்து கொள்வார்.

இங்ஙனம்

எஸ். எஸ். ராஜேந்திரன் நாடக மன்றத்தார்.

(?) கண்ணன் காட்டிய வழி என்ன?

சொல்லித் தெரிய வேண்டுமா என்ன? ..'ரவிவர்மா' சித்திரம் பார்த்ததில்லையா?. ஆற்றோரத்து மரத்தின் மேல் கோபிகாஸ்திரீகளின் . போதும்; போதும்! இந்த இடத்தை ஏன் அழுக்காக்க வேண்டும்...

கண்ணன்; தில்லை

(?) கடவுளுக்குப் பலியிடப்படும் ஆடு சொர்க்கமா அடைகிறது?

இந்த நம்பிக்கை இருந்தால், எத்தனையோ வைதீகப் பித்தர்கள் தட்சணை தராமல் — தவமிருக்காமல் குறுக்கு வழியில் சொர்க்கம் செல்ல வெட்டறிவாளுக்கு முன் கழுத்தை நீட்டியிருப்பார்களே!

ராஜசேகரன்; திருவாரூர்

(?) கோயில்களில் தீப ஆராதனை காட்டுகிறார்களே, ஏன்?

கவனமிருக்கட்டும்; 'கல்'தான் என்று காட்டுவதற்காக!

## நன்றி தெரிவிப்பு

19-8-56 ஞாயிறன்று எனது தந்தை காலஞ் சென்றதை யொட்டி வேதனைக் கடிதங்கள் அனுப்பியும், நேரிலும் வந்து எனது மனத் துயரோடு பங்கு கொண்டு ஆறுதல் கூறிய என் அருமை நண்பர்கள் அனைவருக்கும் என் சார்பாகவும் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். தனித் தனியே நண்பர்களுக்குக் கடிதம் தீட்ட இயலாமைக்குரிய நான் மன்னிப்புக்குரியவன்.

அன்பன்,
கி. மனோகரன்.

ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம், 4-128, மவுண்ட் ரோடு சென்னை-6.

